Regd. M. No. 6934
Phone No. 21841

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்
JANASAKTHI
(காலைப் பதிப்பு)

**22 ஆயிரம் தொழிலாளருக்கு நீதி வழங்க**

ஜூன் 28-ல் மதுரை மில் தொழிலாளர் போராட்ட ஆதரவு தினம் கொண்டாடுக!

சென்னை சர்க்காரின் போக்கை மாற்ற ஜூலை 8-ல் தமிழகப் பஞ்சாலைகளில் கண்டன வேலை நிறுத்தம் செய்க!

எம். கல்யாணசுந்தரம் (எம்.எல்.ஏ.), டி. ஆர். கனேசன்
தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ்.

மலர் 15 இதழ் 307] சென்னை 24-6-59 விகாரி ஞு ஆனி மீ 10உ புதன்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# கம்யூனிஸ்ட் சர்க்காரின் செல்வாக்கு அதிகரித்துள்ளது

## காங்கிரஸ்காரரிடை மனச்சோர்வு

### நேருவின் கேரள விஜயம் கம்யூனிஸ்டுகளுக்கே சாதகமாகும்

### டில்லி அரசியல் வட்டாரங்களில் அடிபடும் கருத்துக்கள்

புதுடில்லி, ஜூன் 23—

டில்லியிலுள்ள ஒரு சில கேரளக் காங்கிரஸ்காரர்களும் சோர்வடைந்து மௌனமாகக் காணப்படுகின்றனர். இந்தத் தருணத்தில் பிரதமர் நேரு கேரளத்திற்கு விஜயம் செய்வது கம்யூனிஸ்டுகளுக்கு ஒரு அரசியல் சாதகத்தை ஏற்படுத்திக் கொடுத்துவிடுமென்று தாங்கள் கவலையடைந்திருப்பதைப் பற்றி அவர்கள் வெளிப்படையாகவே கூறுகின்றனர்.

இவ்வாறு இங்கு அரசியல் வட்டாரங்களில் பேசப்பட்டு வருகிறது.

அந்த வட்டாரங்களில் மேலும் பேசப்படும் விஷயங்களாவன: கம்யூனிஸ்டுகளுக்கெதிரான போராட்டத்தில் தாங்கள் ஏற்கெனவே தோற்றுவிட்டதாகவே கேரளக் காங்கிரஸ்காரர்கள் உணருகின்றனர். ஏனெனில், தவறான பாதையில் செல்லும் காங்கிரஸ்காரர்களின் தலையில் குட்டுவதற்காகக் காங்கிரஸ் மேலிடம் ஒருவருக்குப்பின் மற்றொருவராகத் தூதுவர்களைக் கேரளத்திற்கு அனுப்பி வருகிறது என்ற அபிப்பிராயம் கேரளத்தில் மட்டுமின்றி, நாடு பூராவிலும் ஏற்பட்டுள்ளது. ஏன், வெளிநாடுகளிலும் ஏற்பட்டுள்ளது.

#### தைரியமில்லை

கேரளக் காங்கிரஸ்காரர்கள் உண்மையிலேயே மனச்சோர்வடைந்துள்ளனர். முறையாகத் தாங்கள் நடந்துகொள்வதாகக் கூறுவதற்கு அவர்களுக்கே தைரியமில்லை. ஆயினும் உதக மண்டலத்தில் காங்கிரஸ் மேலிடத்துத் தலைவர்களுடன் விவாதித்து அவர்களின் ஆலோசனையின்படியே கிளர்ச்சி திட்டத்தை வகுத்ததாகக் கூறுகின்றனர்.

மிகவும் சிக்கலான ஒரு சூழ்நிலையில் கொஞ்சம் தவறான பாதையில் செல்வது சாத்தியமே என்றும், ஆனால் கம்யூனிஸ்டுகளும் சரி, மத்திய காங்கிரஸ் தலைவர்களும் சரி இதை மிகைப்படுத்துவதாகவும் அவர்கள் அபிப்பிராயப்படுகின்றனர்.

#### இருவித மனப்பான்மைகளாம்!

கேரள அரசியல் நிலைமையைப் பொறுத்தமட்டிலும் காங்கிரஸ் மேலிடத்தில் இரண்டுவித மனப்பான்மைகள் இருந்து வருவதாகப் பல மாதங்களாகவே கேரளக் காங்கிரஸ்காரர்கள் அபிப்பிராயப்பட்டு வந்துள்ளனர். காங்கிரஸ் மேலிடத்தின் ஸ்தாபன அமைப்பு சம்பந்தமான பகுதி சர்க்காருடன் எப்பொழுதும் ஒரேமாதிரியான கருத்துக் கொண்டிருந்ததில்லையாம். கம்யூனிஸ்ட் சர்க்கார் அரசியல் சட்டபூர்வமாகவே நடந்து வருவதாக மத்திய சர்க்கார் கருதி வந்துள்ளதாம். கம்யூனிஸ்ட் சர்க்காரைப் பற்றி அ. இ. காங்கிரஸ் கமிட்டி காரியாலயத்திலிருந்து வரும் விமர்சனங்களை மத்திய சர்க்கார் மட்டத்தில் காது கொடுத்துக் கேட்கப்படுவதில்லை. அல்லது குறைத்து மதிப்பிடப்பட்டு வந்ததாம். கேரளக் கம்யூனிஸ்ட் சர்க்காரின் பிரதிநிதிகள் கூறுவதைக் கேட்பதுபோல் மத்திய சர்க்கார் கேரளக் காங்கிரஸ்காரர்கள் கூறுவதை, கேரள எம். பிக்கள் கூறுவதைக்கூட காதுகொடுத்து கேட்பதில்லையாம்.

கம்யூனிஸ்டுகளின் மீது இதுவரை கொண்டுவரப்பட்ட பல குற்றச்சாட்டுகளைப் பற்றியும் இதுவரை மத்திய சர்க்கார் அவை சரிதானா என்பதைப் பற்றி விசாரணை செய்யவோ, அல்லது ஏதாவது நடவடிக்கை எடுக்கவோ செய்யவில்லையாம்.

#### குற்றச்சாட்டுகளில் ஒன்று

கம்யூனிஸ்ட் சர்க்கார் பலவிதமான நடவடிக்கைகளின் மூலம் கேரளத்தில் தங்கள் ஆட்சியை நிரந்தரமாக ஸ்தாபித்துக் கொள்ள முயற்சி செய்கிறது, என்பது கேரளக் காங்கிரஸ்காரர்களின் குற்றச்சாட்டுகளில் ஒன்று.

எந்த ஒரு ஜனநாயக நாட்டிலும், எதிர்க்கட்சிகள் ஒரு சர்க்காரை மாற்ற நினைத்தால் அவர்கள் அடுத்த தேர்தல்வரை காத்திருக்க வேண்டியதுதான் சாதாரண நியதி.

#### 2 ஆண்டுகள் பொறுத்தால்....

ஆனால் கேரளக் கிளர்ச்சிக்காரர்கள் வேறுவித முடிவுக்கு வந்தனர். ஏனெனில் மத்திய சர்க்கார் உடனே தலையிடாவிட்டால், இன்னும் இரண்டு வருடங்களில் கம்யூனிஸ்டுகளைத் தவிர வேறு எந்தக் கட்சியும் அடுத்த தேர்தலில் பதவிக்கு வர முடியாத நிலைமை ஏற்பட்டுவிடும் என்று அவர்கள் வாதாடினர். மத்திய சர்க்கார் தலையிடும் சந்தர்ப்பமும் இல்லாதிருப்பதால், கேரளக் காங்கிரஸ்காரர்கள் "இறுதிவரைப் போராடுவது" என்ற கிளர்ச்சியில் குதித்துள்ளனர்.

#### மக்கள் ஆதரவு

மக்கள் பூராவும் தங்கள் 'போராட்டத்திற்கு ஆதரவாக இருப்பதாகக் கிளர்ச்சித் தலைவர்களுக்குங்கூட சொல்வதற்குத் துணிச்சல் கிடையாது. கம்யூனிஸ்டுகளுக்குப் பரந்த மக்கட் பகுதிகளின் ஆதரவு இருக்கிறது. விவசாயிகள், நகரப்புறத் தொழிலாளிகள், பள்ளி ஆசிரியர்கள், கலைத்துறை ஊழியர்கள் ஆகிய பல பகுதிகளின் ஆதரவு பல்வேறு நிர்வாக நடவடிக்கைகளின் பயனாக சர்க்காருக்குக் கிடைத்துள்ளது. ஜனத்தொகையில் சுமார் மூன்றில் ஒரு பகுதியாயுள்ள ஈழவ சமூகத்தினரின் ஆதரவு கம்யூனிஸ்டுகளுக்கு இருந்தபோதிலும் அவர்கள் வகுப்புவாத மனப்பான்மை கொண்டவர்களல்ல. இந் நிலையில், கேரளத்தில் நேருவின் வேலை இலகுவானதல்ல; மிகவும் சிக்கலானது என்றும் டில்லி அரசியல் வட்டாரங்களில் கருதப்படுகிறது.

ஹார்வி மில் போராட்டம்: மதுரையில் உண்ணாவிரதமிருக்கும் கம்யூனிஸ்ட் தலைவர்கள் ஏ. பாலசுப்ரமண்யமும், கே. டி. கே. தங்கமணி (எம். பி.)யும் படத்தில் காணப்படுகின்றனர். தினந்தினம் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து பார்த்து ஆதரவு தெரிவித்து விட்டுச் செல்கின்றனர்.

**22 ஆயிரம் தொழிலாளர்களை வெளியே நிறுத்தியுள்ள ஹார்வி மில் கதவடைப்பு**

**இன்று 38-வது நாள்**

இந்த அக்ரமத்தை எதிர்த்து

கே. டி. கே. தங்கமணி (எம்.பி.)
ஏ. பாலசுப்ரமண்யம்

உண்ணாவிரதம்

**இன்று 6-ம் நாள்**

அரசாங்கத்தின் கண் திறக்க இன்னும் எத்தனை நாள்?

குறிக்கோளை அடைய 'புனித யுத்தம்'! —'சங்கர்ஸ் வீக்லி'

## 'மலையாளி' பத்திரிகைமீது வழக்கு

திருவனந்தபுரம், ஜூன் 20—

போலீசார் தமது கடமைகளிலிருந்து விலகி நிற்கவேண்டும் என்று தூண்டும் முறையில் "போலீசார் கவனத்திற்கு" என்றமகுடத்தில் 'மலையாளி' பத்திரிகை ஒரு தலையங்கம் தீட்டியிருந்தது. இதற்காக போலீஸ் சட்டப்பிரகாரம் திருவனந்தபுரம் டி. எஸ். பி. வழக்குத் தொடுத்துள்ளார்.

## முற்போக்கு சட்டங்களால் பீதியுற்ற பிற்போக்காளர் கிளர்ச்சி

### நேருவிடம் கேரள கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி விளக்கம்

திருவனந்தபுரம், ஜூன் 23—

இப்பொழுது கேரளத்துக்கு விஜயம் செய்துள்ள பிரதமர் நேரு இன்று காலை நாயர் ஸ்தாபனத் தலைவர் மன்னத் பத்மநாபன், பி. சோ. தலைவர் பட்டம் தாணுப்பிள்ளை, ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் எம். என். கோவிந்த நாயர் தலைமையில் வந்த ஒரு தூதுகோஷ்டியினர் ஆகியோரைச் சந்தித்துப் பேசினர்.

மாலையில் ராஜ்ய அமைச்சர்களையும் பிரதேசக் காங்கிரஸ் தலைவர்களையும் சந்தித்துப் பேசுவார்.

பேச்சுவார்த்தைகளின் விபரங்களை வெளியிட தலைவர்கள் விரும்பவில்லை.

நேருவைச் சந்தித்தவுடன் தோழர் எம். என். கோவிந்தன் நாயர் இப்பொழுது இங்கு கூடியுள்ள ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டத்தில் பேச்சு விபரம் பற்றி அறிக்கை சமர்ப்பித்தார் என்று தெரிகிறது.

மன்னத் பத்மநாபன் நேருவுடன் 75 நிமிஷங்கள் விவாதித்தார். "இப்பொழுதுள்ள அரசாங்கத்தை இனியும் சகிக்க முடியாது எனவும் மத்திய அரசாங்கம் ஏதாவது ஒரு பரிகாரம் காணவேண்டுமெனவும்" தாம் வற்புறுத்தியதாக அவர் நிருபர்களிடம் கூறினர்.

#### எம். என். கோவிந்தன் நாயர்

நிருபர்களிடம் பேசுகையில் எம். என். கோவிந்தன் நாயர் நிலைமை பற்றிப் பிரதமரிடம் விளக்கிக் கூறியதாகவும் மந்திரிசபை ராஜினாமா என்ற விஷயம் எந்நிலையிலும் எழவில்லை எனவும் கூறினர்.

கூட்டுறவு ஸ்தாபனங்களைத் திருத்தி அமைத்தல், நிலச்சீர் திருத்தங்கள் போன்ற முன்னேற்றகரமான சட்டங்களுக்கெதிராகப் பிற்போக்காளர்களின் பீதி உணர்ச்சிதான் கிளர்ச்சிக்குக் காரணம் என்பதைப் பிரதமரிடம் தமது தூதுகோஷ்டி விள்க்கியதாக அவர் கூறினர்.

சில தனிப்பட்ட பிரமுகர்களையும் நேரு சந்தித்தார். முஸ்லிம் லீக் பிரதிநிதிகளைப் பிரதமர் மாலையில் சந்திப்பார் என எதிர்பார்க்கப்படுகிறது. பி. டி. ஐ.

## ஊர்வலமாகச் சென்று முதலமைச்சர் காமராஜரைப் பேட்டிகாண முடிவு

### போராட்டத்தை வலுப்படுத்த எக்ஸ்பிரஸ் ஊழியர்கள் உறுதி

சென்னை, ஜூன் 23—

58 நாட்களாக கோயங்காவின் கதவடைப்பை எதிர்த்துப் போராடிவரும் எக்ஸ்பிரஸ் தொழிலாளர்கள் இன்று மாலை கூடி நிலைமையைப் பரிசீலனை செய்து, 25-6-59 வியாழக்கிழமை, சென்னை திரும்பும் முதலமைச்சர் காமராஜரை ஊர்வலமாகச் சென்று பேட்டி காண்பதென்றும், திட்டவட்டமான பதில் கொடுக்கும்படிக் கேட்பதெனவும் முடிவு செய்தனர். ஊர்வலம் வியாழன் காலை 8-மணிக்கு எக்ஸ்பிரஸ் காரியாலய வாயிலிலிருந்து புறப்படும்.

கோயங்கா நியாயமான முறையில் சமரசம் செய்து கொள்ளாவிட்டால் மேற்கொண்டு போராட்டத்தை வலுப்படுத்துவதென்றும் கூட்டம் முடிவு செய்தது.

வியாழக் கிழமையன்று சென்னை நகரப் பத்திரிகைத் தொழிலாளர்கள் சங்கங்களின் பிரதிநிதிகள் கோட்டைக்குச் சென்று முதலமைச்சரை எக்ஸ்பிரஸ் தகராறு விஷயமாகப் பேட்டி காண்பார்கள் சர்க்கார் தீவிரமாகத் தலையிட்டு நியாயத்தின் அடிப்படையில் சமரசம் ஏற்படுத்த வேண்டும் என்று அவர்கள் வற்புறுத்துவார்கள் என்று தெரியவருகிறது.

## தலையிடாததால் ஆத்திரம்

### நேருவின் படங்களை அகற்றுகின்றனர்

பூஞார், ஜூன் 22—

கோட்டயம் ஜில்லாவிலுள்ள பூஞார் என்னுமிடத்தில் கிளர்ச்சிக்காரர்கள் கூடினர்கள். பிரதமர் நேரு கேரள சர்க்காருக்கு எதிராகத் தலையிட்டு நடவடிக்கை எடுக்காததால் ஆத்திரமுற்று அவரது படங்களை வீடுகளிலிருந்து அகற்றிவிடுவது என்று முடிவு செய்து பலர் அகற்றிவிட்டதாகத் தெரிகிறது.

## நேரு-கொச்சி மஹாராஜா சந்திப்பு

திருவனந்தபுரம், ஜூன் 23—

கொச்சி மஹாராஜா இன்று மாலை நேருவைச் சந்தித்தார்.

முஸ்லிம் லீக் பிரதிநிதிகளும் நேருவைச் சந்தித்துப் பேசினர். (பி. டி. ஐ.)

**கடைசிச் செய்தி**

## நேரு—கேரள காங்கிரஸ் தலைவர்கள் பேச்சு

திருவனந்தபுரம் ஜூன் 23—

கேரளப் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டியின் தூதுகோஷ்டி இன்றிரவு பிரதமர் நேருவுடன் 2 மணி நேரம் பேச்சு நடத்தியது. பேச்சு இரவு 9-15 மணி முதல் 11-15 மணி வரையில் நீடித்தது.

நாளைக்கு பிரதேச காங்கிரஸ் கமிட்டி கூட்டங்களில் நேரு கலந்துகொள்வார். (பி.டி.ஐ.)



## மேற்கு வங்கத்தில் பஞ்சநிலைமை

### 25ந்-தேதி பொதுவேலைநிறுத்தம், ஹர்த்தால் நடக்கும்

### இடதுசாரி கட்சிகளின் உறுதி

கல்கத்தா, ஜூன் 23—

மேற்கு வங்க சர்க்காரின் உணவுக் கொள்கையை ஆட்சேபித்து ஜூன் 25ந் தேதி இந்த ராஜ்யம் முழுவதிலும் பொது வேலை நிறுத்தமும் ஹர்த்தாலும் நடத்த இடதுசாரி கட்சிகளின் கமிட்டி ஏற்கனவே செய்த முடிவு இன்று மீண்டும் ஊர்ஜிதம் செய்யப்பட்டது. அரிசி பற்றாக்குறை, பஞ்சம் ஒழிப்புக்காகச் செயல்பட அமைக்கப்பட்டிருக்கும் இக்கமிட்டியில் பிரஜா சோஷலிஸ்ட் கட்சி தவிர இதர எல்லா இடதுசாரி கட்சிகளும் சேர்ந்துள்ளன.

இக்கமிட்டியின் முடிவைச் செய்தி நிருபர்களிடம் கம்யூனிஸ்ட் தலைவரும் மேற்கு வங்க சட்டசபை எதிர்க்கட்சித் தலைவருமான ஜோதிபாசு, பார்வர்டு பிளாக்கைச் சேர்ந்த ஹேமந்த பாசு, சோஷலிஸ்ட் ஐக்கிய ஸ்தாபனத்தைச் சேர்ந்த சுபோத் பானர்ஜி இவர்கள் கூட்டாக விளக்கிக் கூறினர்.

விலை கட்டுப்பாடு உத்தரவை ராஜ்ய சர்க்கார் தாற்காலிகமாக நிறுத்தி வைத்திருப்பதால் உணவு நெருக்கடி மேலும் கடுமையாகுமென்றும் கொள்ளை லாபமடிப்பதும் கள்ளமார்க்கெட்டும் தங்கு தடையின்றி நடப்பதாக முடியுமென்றும் என்றும் கமிட்டி அறிவித்தது.

அக்கமிட்டி மேலும் கூறியதாவது:—"மேற்கு வங்க ராஜ்யம் முழுவதிலும் ஜனநாயக ஸ்தாபனங்கள் பதுக்கலை எதிர்த்தும் பறிமுதலான பதுக்கப்பட்ட தானியங்களைக் கட்டுப்பாடு விலைகளில் வினியோகிக்க வேண்டுமென்றும் முழு சக்தியுடன் கிளர்ச்சி நடத்திவருகின்றன. கட்டுப்பாடு உத்தரவுகளை நிறுத்தி வைப்பதென்று சர்க்கார் முடிவு செய்திருக்கிறது.

மணங்கு நெல் விலை 9 ரூபாயும் 10 ரூபாயும் என்று நிர்ணயிக்கப்பட்டிருந்தது. அதற்குப் பதில் மணங்கு ஒன்றின் விலை 12 ரூபாயும் 13 ரூபாயுமாக நிர்ணயிக்கப்பட வேண்டுமென்று நாங்கள் பன்முறை அரசாங்கத்தை வேண்டிக் கொண்டோம்.

சர்க்கார் எங்கள் கோரிக்கைக்குச் செவிசாய்க்கவில்லை. இதனால் விவசாயிகள் தங்கள்நெல்லை 9 ரூபாய்க்கும் 10 ரூபாய்க்கும் விற்கவேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளானார்கள். இப்பொழுது உணவு தானியங்களைப் பதுக்கி வைத்தவர்கள் தாங்கள் இஷ்டப்படும் விலைக்கு அரிசி விற்க அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

கட்டுப்பாடு உத்தரவுகளை மேற்கு வங்க சர்க்கார் அமல் நடத்தவும்முயலவில்லை. அல்லது எதிர்கட்சிகளின் யோசனை பிரகாரம் உணவு சேமிப்புக்கும் ஏற்பாடு செய்யவில்லை. இதன் விளைவாக, மேற்கு வங்க ராஜ்யம் முழுவதிலும் பஞ்ச நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

எனவே சர்க்காரின் உணவு கொள்கையை ஆட்சேபித்து பொதுவேலைநிறுத்தமும் ஹர்த்தாலும் நடத்துமாறு மக்களை அழைப்பது தவிர வேறு வழியில்லை என்றும் கமிட்டி கூறுகிறது.

நிவாரண வேலை துவக்கும்படியும் ஒழுங்கு தவறி நடக்கும் வர்த்தகர்மீது கடுமையான நடவடிக்கைகள் எடுக்கும்படியும் கமிட்டி வற்புறுத்தியுள்ளது.

## 28-6-59-ல் ஹார்வி தினம்

### கூட்டங்களில் பேசும் தலைவர்கள்

கோவை ... பி. ராமமூர்த்தி
திருப்பூர் ஆர். உமாநாத்
சேலம் எம். கல்யாணசுந்தரம் எம் எல் ஏ.
குடியாத்தம் கே. டி. ராஜு
மேட்டூர் டி. ஆறுமுகமுதலியார்
திருச்செங்கோடு வி. கே. கோதண்டராமன் எம். எல். ஏ.
புதுக்கோட்டை கே. ரமணி
திருச்சி எஸ்.ஏ. முருகானந்தம்
கோவில்பட்டி எஸ்.ஏ. தங்கராஜ்
ராஜபாளையம் வரதராஜன்
கரூர் மதனகோபால்
வாலாஜாபாத் ஏ. எஸ். கே. அய்யங்கார்
புதுவை வ. சுப்பையா
சென்னை ப. ஜீவானந்தம்
,, மோகன் குமாரமங்கலம்

மேற்கண்ட தினத்தில் குறிப்பிட்ட தோழர்கள் தாங்கள் கலந்துகொள்ள வேண்டிய கூட்டங்களுக்கு தவறாமல் போகும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

—எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ.
தலைவர்
தமிழ்நாடு தொ. ச. காங்கிரஸ்

## டாக்டர் ஜெட்டி ஜகனின் தந்தை மறைவு

ஜார்ஜ்டவுன், ஜூன் 22—

மக்கள் முற்போக்குக் கட்சியின் தலைவரும் பிரிட்டிஷ் கயானா சர்க்காரில் தொழில், வர்த்தக மந்திரியாகவும் உள்ள டாக்டர் ஜெட்டிஜகனின் தகப்பனார் ஜெய்பால் ஜகன் இங்கு நேற்று உயிர்நீத்தார். 81 வயதான திரு. ஜெய்பால் ஜகன்

## தாம்ஸன் அச்சகத்தில் ஆட்சேப வேலைநிறுத்தம்

சென்னை, ஜூன் 23—

பிராட்வேயிலுள்ள தாம்ஸன் அச்சக நிர்வாகம் கடந்த ஒரு வார காலமாகப் பல தொழிலாளர்களைத் திடீர் திடீரென சஸ்பெண்டுகள் செய்தும், எச்சரிக்கை நோட்டீஸ்கள் கொடுத்தும், தாக்குதல் நடத்தி, அனைவரையும் மிரட்டி ஓவர் டைம் வேலையை அமுல் நடத்தத் திட்டமிட்டு வந்தது. இதுகண்டு ஆத்திரமுற்ற தொழிலாளர்கள் இன்று ஆட்சேப உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தார்கள். ஒருவர்கூட வேலை செய்யவில்லை. தொழிலாளர்களை மிரட்டுவதற்காக உதவிமானேஜர் பலசூழ்ச்சிகளையெல்லாம் செய்து பார்த்தார். அன்று மத்தியானம் தொழிலாளர்களுக்கு வீட்டார் அனுப்பிய சாப்பாட்டையும் உள்ளே அனுமதிக்கவில்லை.

பிரஸ் லேபர் யூனியன் காரியதரிசி ஏ. கோவிந்தசாமி நிர்வாகிகளுடன் லேபர் ஆபீஸர் முன்னிலையில் பேச்சு வார்த்தை நடத்தினர்.

அதன் விளைவாக, நிர்வாகத்தினர் வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்கள் யாரையும் பழிவாங்குவதில்லை யென்றும், கோரிக்கைகள் பற்றி மறுநாள் பேச்சுவார்த்தை நடத்துவதாகவும் தெரிவித்ததின்பேரில் உள்ளிருப்பு வேலைநிறுத்தம் வாபஸ் வாங்கப்பட்டது. பாதுகாப்புக்காக போலீஸார் வரவழைக்கப்பட்டிருந்தனர்.

பின்னர், சங்க அலுவலகத்தில் கூடி, விஷயங்களை ஏ. கோவிந்தசாமி, எஸ். தீனதயாளு, கன்னியப்பன், ஐ மாயாண்டி பாரதி ஆகியோர் தொழிலாளிகளுக்கு விளக்கி...

ஜனசக்தி

சென்னை 24-6-1959

# …வெறியின் தாண்டவம்!

…ன்னுப்பிரிக்க வெள்ளை…யர் ஆட்சியின் நிற…றி எல்லை மீறிச் சென்று…ண்டிருக்கிறது. இதனால்…ன்னுப்பிரிக்காவே ஒரு…ளமாகும் சூழ்நிலை உரு…க் கொண்டிருக்கிறது …ன ஒதுக்கல்திட்டத்தைபல…ரூபங்களில் அமுலாக்க…வந்துள்ளது தென்னுப்…க சர்க்கார். கருப்புநிறத்த…க்கு எதிராகத் தொடங்கி…ள வெள்ளையரின் 'யுத்த'த்…து சென்ற வியாழனன்று…கு ஆப்பிரிக்கப் பெண்… உயிர் துறந்ததை வாசகர்… அறிவர். வெள்ளையர்…சியின் போலீஸ், டர்பனுக்…ல் அதிகாரிகளிடம்…மதியாக முறையிடவந்த…ப்பிரிக்கப் பெண்கள் மீது…பாக்கிப் பிரயோகம்…ய்ததால் நால்வர் உயிர்…தனர்! பலருக்குப் படு…ம்!

…ஜூன் 22-ல் இதே டர்பன்…ில் மீண்டும் ஆப்பிரிக்கப்…ண்கள் தாக்கப்பட்டுள்ள… கண்ணீர் புகை…டித்து அவர்களை வெள்…யர் போலீஸ் கலைத்ததாம்! அங்கு பெண்கள் ஆர்ப்…ட்டம் செய்வது எதற்காக? …சாங்கத்தைக் கவிழ்ப்பதற்…க இந்தக் கிளர்ச்சியில் ஈடு…டார்களா? இல்லை.

ஆப்பிரிக்கமக்கள் வசிக்கும்…தேசத்திலுள்ள ஒவ்வொரு…டும் பயன்படுத்திக் கொள்…ம் தண்ணீரை அளந்து… போடுவதற்காக ''தண்…ர் மீட்டர்'' வைக்க வேண்…ம் என்று வெள்ளையர் ஆதிக்…திலுள்ள டர்பன் நகரசபை…டிவு செய்திருக்கிறது. கருப்பு நிறத்தவர் குடிக்கும்…ண்ணீருக்கும் வரி விதித்…ல் அவர்கள் டர்பன் நக…த்தை விட்டே வெளியேறி…டுவார்கள் என்று எண்…ியே இந்த முடிவுசெய்யப்…ட்டது. இதையே ஆப்பி…க்கத் தாய்மார்கள் ஆட்சே…த்திருக்கின்றனர். ஆர்ப்…ட்டம் செய்யும் அவர்கள்…து துப்பாக்கிக் கொண்டு…க்குகிறது வெள்ளையர்…ட்சி.

கருப்பு நிறத்தவர்—ஆப்பி…க்கர், இந்தியர் வழிவந்தவர்…ர் ஆகியோர்தான்—தென்…ப்பிரிக்காவில் பெருவாரி…க உள்ள மக்கள். அங்கு…டியேறிய வெள்ளையர் சிறு…ன்மையோர். ஆனால் சிறு…ன்மையோரான வெள்ளை…நக்குத்தான் அங்கு வாக்…ரிமை உண்டு. எனவே…ங்கு மெஜாரிடி…க்களான கருப்பு இனத்த…ர்மீது மைனாரிடியான…வள்ளையினத்தின் சார்பில்…ந சில நிலப்பிரபுத்துவ, முத…ளித்துவ வெறியர்களின்…வாதிகாரம் நடக்கிறது.

இத்தகைய கொடுமையை…கற்ற ஏனைய மேற்கத்திய…தலாளித்துவநாடுகள் இது…ரை உறுதியாக முன்வரவே…ல்லை. அமெரிக்காவிலும்…ரிட்டனிலுமே நிறவெறிக்கு…டிவு காணாத மேற்கத்திய…காதிபத்தியவாதிகள் தென்…ப்பிரிக்கக் கொடுமைகளை…வ்வாறு எதிர்ப்பார்கள்? தென்னுப்பிரிக்காவில் இத்…ன காலமாக நிறவெறிக்கு…லக்காகி, வெந்து நொந்து…ான மக்கள் இன்று அதற்கு…து முடிவுகாண அறப்…ாரில் இறங்கிவிட்டார்கள்! …டர்பனில் மட்டுமல்ல, பல…ரங்களில் ஆப்பிரிக்க மக்…ரின் ஒத்துழையாமை இயக்…ம் நடக்கிறது. மனித தர்மத்…க்கும், நீதிக்கும், புறம்பான…க்ரமத்திற்கு எதிராகவே…ந்த அறப்போர்! இதற்கு இந்…ிய நாடு முழுதும் ஒருமுக…க ஆதரவு தருவது நிச்சயம். …காமன்வெல்த்தில் ஒரு…றுப்பினராக உள்ள தென்…ப்பிரிக்காவின் இந்த அக்ர…த்தை அதே காமன்வெல்த்…ில் உறுப்பினராக இருப்ப…ில் பெருமை கொள்ளும்…ாங்கிரஸ் ஆட்சி எதிர்த்துப்…போராட முன்வரும் என்று…ம்புகிறோம்.

## பத்திரிகை உலகிற்கு ஒரு பேரிழப்பு

ஹிந்து பத்திரிகையின் அதி…ரும் ஆசிரியருமான கஸ்தூரி…ீனிவாசன் காலமானார். பத்…ிரிகை உலகிற்கு பேரிழப்பா…ம். ஹிந்து பத்திரிகையைக்…ல் நூற்றுண்டிற்கு மேலாக…

இடம் பெறத்தக்க விதத்தில் அதன் திறத்தை உயர்த்தியவர் சீனிவாசன்.

பத்திரிகை ஜாம்பவான்களான கஸ்தூரிரங்க அய்யங்கார், ஏ. ரங்கசாமி அய்யங்கார்போன்ற பெரியவர்களின் கீழ் பணியாற்றி அவர்களது அடிச்சுவட்டில் பத்திரிகைத் தரம் குன்றாது 'ஹிந்து'வை வளர்த்தவர் சீனிவாசன்.

எந்த ஒரு பத்திரிகையையும் போலவே குறிப்பிட்ட வர்க்க நலன்களுக்கு ஹிந்து பத்திரிகையும் நிற்கிறது என்பது வாஸ்தவம். இருந்த போதிலும் நாட்டிலுள்ள ஜனநாயக உணர்ச்சிகளுக்கு மதிப்பளித்தும் மக்களிடை ஏற்பட்டுள்ள விழிப்பைக் கணக்கிலெடுத்துக் கொண்டும் செய்திகளைப் பிரசுரிப்பதில் ஹிந்து ஒரு நிதானப் போக்கைக் கைக்கொண்டிருந்தது என்பதை மறுக்கமுடியாது.

சர்வதேச அரங்கிலிருந்து செய்திகள், செய்தி விமர்சனங்கள் சிறப்பான இடம் பெற்றன. பிறநாட்டுச் செய்திகளை அதிகமாகத் தெரிந்து கொள்ள இவை உதவின.

பத்திரிகை அதிபர் சங்கத் தலைவர் என்ற முறையிலும் வேறு பல முறைகளிலும் தமக்கு வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் பத்திரிகைகளின் தரம், முக்கியத்துவம் இவற்றை உயர்த்தவும் சர்க்காரும் பொதுமக்களும் இவற்றை அங்கீகரிக்கவும் சீனிவாசன் அரும்பாடுபட்டிருக்கிறார்.

அன்னார் மறைவு பத்திரிகை உலகுக்கே பெரிய நஷ்டம். அவரது குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம். அவரது நினைவுக்கு அஞ்சலி செலுத்துகிறோம்.

# பட்டம், மன்னம் தலைமையில் அகிம்சாவாதிகளின் கோஷங்கள்!

## காங்கிரஸ் தலைவர்களின் விசேஷ கவனத்திற்கு

திருவனந்தபுரம், ஜூன் 20—

கேரளத்தில் கிளர்ச்சி நடத்தி வரும் காங்கிரஸ், பி. சோ. முதலிய கட்சிகளும் வகுப்புவாத ஸ்தாபனங்களும் அங்கமாலி தினம் என்று கருப்புக்கொடி ஊர்வலங்கள் நடத்தின. இந்த ஊர்வலங்களில் அவர்கள் போட்ட கோஷங்கள் படுகேவலமான முறையில் ஆத்திரமூட்டும் போக்கில் இருந்தன. ஊர்வலத்திற்குத் தலைமைவகித்தவர்கள் பட்டம் தாணுப்பிள்ளையும், மன்னத்து பத்மநாபனுமாகும்.

இதோ அந்த கோஷங்கள்:

''நாடு பரிக்கானி கழியில லெங்கில் தாடி வடிக்கான் போய்க் கூடே''

(நாட்டை ஆள முடியாவிட்டால் சிரைக்கப் போவதுதானே)

இ. எம். எஸ். நம்பூரி ஜீவன் வேணங்கில் கேரளம் விட்டோ

(இ. எம். எஸ். உயிர் தப்ப வேண்டுமானால் கேரளத்தை விட்டு வெளியேறு.)

சோரக்குடியா தோமஸே கௌரிச் சோத்தியை ரட்சிச்சோ.

(ரத்தம் குடிக்கும் தோமசே ஈழவ கௌரியைப் பாதுகாத்துக் கொள்.)

வம்பு பரயும் கிருஷ்ணய்யர் வீண்டும் கிட்டும் ரட்சிச்சோ.

(வம்பு பேசும் கிருஷ்ணய்யரே மீண்டும் (அடி) கிடைக்கும்—முன்பு தாக்கியுள்ளது தெரிந்ததே.)

தூங்கி மரிக்கான் கயிறில லெங்கில் கயிறுதராம் நம்பூரி.

(தூக்குப் போட்டுக்கொள்ளக் கயிறில்லாவிட்டால் கயிறு தருகிறோம் நம்பூதிரி.)

# மேற்கு சென்னை மாதர்சங்க கூட்டம்

## நியாயவிலைக்கடை வேண்டும்

சென்னை, ஜூன் 23—

மேற்கு சென்னை மாதர் சங்க அங்கத்தினர்களின் பேரவைக் கூட்டம் 21-6-59ல் திருமதி டி. எல். ராதாபாய் தலைமையில் நம் மாள்வார்பேட்டை பாண்டுரங்கன் பஜனைக்கோவில் மைதானத்தில் நடைபெற்றது.

தோழர்கள் என். எஸ். ருக்மணியம்மாள், எம். ஆர். ஜி. பாண்டியன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்கள்.

பின்னர், அகில இந்திய மாதர் சங்கத்தின் வழிகாட்டுதலின்படி அணுகுண்டுகளைத் தடைசெய்ய வேண்டுமென்று கையெழுத்துக்கள் வாங்க வேண்டுமென்றும் 500 குடும்பங்களுக்கு ஒரு நியாயவிலைக் கடைகள் வீதம் திறந்து, படி அரிசி 12 அணுவுக்குக் கிடைக்க சென்னை சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் மற்றும் போராடும் ஹார்வி, தினமணி தொழிலாளர்களுக்கு ஆதரவு நல்கியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

பின்னர் புதிய ஆண்டுக்கு சங்கத் தலைவராக டி. கண்ணம்மாளும், செயலாளராக டி. எல். ராதாபாயும் உறுப்பினர்களாக எம். என். ஜெயலெக்ஷிமி, பி. பார்வதி, லெக்ஷிமியம்மாள் ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

# உணவு நெருக்கடியும் மேற்கு வங்க சர்க்காரும்

கல்கத்தா, ஜூன் 22—

மேற்கு வங்கத்தில் அரிசி மில்கள் 25 சதவிகித அரிசியை சர்க்காருக்கு விற்கவேண்டுமென்று 1958-ம் வருடம் முதல் போடப்பட்டிருந்த லெவி முறையையும், அரிசி, நெல்விலை நிர்ணயத்தையும் ரத்து செய்து விடுவதென்றும், திருத்தப்பட்ட ரேஷன் ஷாப்புகள் மூலம் அரிசி வினியோகம்பண்ணுவதென்றும் மேற்கு வங்க பி.சி.ராய் சர்க்கார் தீர்மானித்திருக்கிறது.

அரசியல் கட்சிகள் கிளர்ச்சி செய்து நிலைமையை மோசமாக்க வேண்டாமென்று பி. சி. ராய் கேட்டுக்கொண்டார்.

# புதிய பள்ளிகள், குழந்தைவளர்ப்பு நிலையம் மத்திய பஸ் நிலையம் அமைக்கப்படும்

## கோவை நகர சபையின் அரிய முடிவுகள்

கோவை, ஜூன் 22—

கோவை நகரசபைக் கூட்டம் நகர மன்றத் தலைவர் தோழர் எம். பூபதி தலைமையில் ஜூன் 13ல் நடைபெற்றது. கோவை நகரசபை, கம்யூனிஸ்ட் கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம், ஜனநாயக காங்கிரஸ், முற்போக்கு சுயேச்சை உறுப்பினர்கள் ஒன்றுபட்டு கம்யூனிஸ்ட் தோழர் எம். பூபதியை தலைவராகக்கொண்டு நகரசபை நிர்வாகம் வந்து இரண்டு மாதங்கள்தான் ஆகின்றன.

இரண்டு மாதங்களில் நகர மக்களுக்கு மிகத் தேவையான தண்ணீர் பிரச்சினைகள், மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கு அதிக பள்ளிகள் ஏற்படுத்தவும் வரி கொடுக்காமல் பாக்கியுள்ள ஏழை மக்களை கோர்ட்டு, ஜப்தி போன்ற நடவடிக்கைகளிலிருந்து பாதுகாக்கவும், நகர மக்கள், மற்ற வெளியூர் பிரயாணிகள், கோவையிலிருந்து வெளியூர் போகவேண்டுமானால், பல பகுதிகளிலுள்ள பஸ் ஸ்டாண்டுக்கு ஒன்று அல்லது இரண்டு மைல்கள் தூரம் போகவேண்டிய கஷ்டமான நிலைமை இருந்து வருவதை போக்க சென்டர் பஸ் ஸ்டாண்டு கட்டுவது போன்ற முக்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### தீர்மானங்கள்

இந்த ஆண்டில் நகராட்சி உயர் நிலைப் பள்ளியில், எஸ். எஸ். எல். சி. டர்ட்க்ஷயில் தேறிய மாணவர்களின் சதம் மிகவும் குறைந்துள்ளது பற்றியும் பள்ளியில் போதிக்கும் தரம் குறைந்துள்ளது பற்றியும், ஒரு சில ஆசிரியர்களின் பொறுப்பின்மைப் பற்றியும் குணதோஷம் கூறப்பட்டன.

தோழர்கள் என். எஸ். பாபா, ஞானகிராமன், எஸ். ராமசாமி, ஆர். ரங்கசாமி, கே. பழனிசாமி, சு. ஆறுமுகம் முதலியவர்கள் விவாதத்தில் பங்கு கொண்டனர். தலைவர் பதிலளிக்கையில் மேற்கூறிய பல விஷயங்கள் உண்மை தானென்றும் இந்த ஆண்டில் ஷ குறைகளை நிவர்த்தி செய்ய ஆவன செய்ய, அதிகாரிகளும், கவுன்சிலர்களும், தலைமை ஆசிரியர்களும் கொண்ட ஒரு கல்வி ஆலோசனைக் கூட்டம் ஒன்றை விரைவில் நடத்தப் போவதாகவும் கூறினார்.

… விவாதித்து முடிவு செய்யப்பட்டன.

1. சிறைக்காவலாளர்கள் விடுதிக்குட்பட்ட நிலத்தை அரசாங்கத்தாரிடமிருந்து பெற்று அங்கே ஒரு பெண்கள் உயர்நிலைப்பள்ளி கட்டுவதென்று முடிவு செய்யப்பட்டது.

2. வளர்ந்து வரும் பள்ளி மாணவ - மாணவிகளின் இட நெருக்கடியைக் குறைக்க, 1959-60-ம் ஆண்டிலிருந்து, பெரிய கடைவீதி ஒப்பணக்கார வீதி, அனுப்பர் பாளையம், ராமர் கோவில் வீதிகளிலுள்ள நடுநிலைப் பள்ளிகளில் நான்காம் படிவம் ஆரம்பிக்க முடிவு செய்யப்பட்டது.

3. சென்னை அரசினர் கொடுக்கும் கிராண்டைப் பயன்படுத்தி, 12வது வட்டாரம், சீதாலட்சுமி பிரசவ விடுதிக்கருகில் குழந்தைகள் வளர்ப்பு இல்லம் ஒன்று கட்டுவதென்று தீர்மானிக்கப்பட்டது.

4. நகராட்சிப் பள்ளி ஆசிரியர்களின் நலனைக் குறிக்கோளாகக்கொண்டு அவரவர்கள் வசிக்கும் பகுதிக் கருகாமையிலே உள்ள பள்ளிகளில் வேலை செய்யவும், கணவன் மனைவிமார்களை ஒரே பள்ளியில் பணிபுரிய அனுமதித்தும், இருவர் மனம் ஒப்பி மாற்றம் கோரினால் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்யவும் நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாமென ஆணையாளருக்கு மன்றம் யோசனை கூறும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

5. 18-6-59ல் கோவை வரவிருக்கும் சென்னை மேயர் திரு. அ. பொ. அரசு அவர்களுக்கு ஒரு வரவேற்பு பத்திரம் வாசித்தளித்து கவுரவிக்க முடிவு செய்யப்பட்டது. (இதன் பிரகாரம் சென்னை மேயர் இங்கு வந்த போது வரவேற்பும் அளிக்கப்பட்டது.)

6. நகரசபை வாசகசாலைகளுக்கு நம்நாடு, ஜனசக்தி, மணிச்சுடர் பத்திரிகைகளும் வினியோகம் செய்ய முடிவு செய்யப்பட்டது.

7. கோவை நகர மக்களின் வெகு நாளைய அபிலாஷைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் ஒரு மத்திய பஸ் நிலையம் அவனாசி ரோடில் போலீஸ் ரிசர்வ் லைன் …

8. இரண்டு வருடத்திற்கு மேற்படாத சொத்து வரி பாக்கித் தொகையை வசூலிக்க கோர்ட் நடவடிக்கை எடுக்காமல், தற்காலிகமாக நிறுத்தி வைக்கலாமென முடிவு செய்யப்பட்டது.

குறிப்பு.—இந்தத் தீர்மானத்தின் மூலம் ஏழை, நடுத்தர மக்கள் கோர்ட் நடவடிக்கைகள் மூலம் வீடு சப்தி செய்வதினின்றும் பாதுகாப்பு பெற்றுள்ளார்கள்.

9. பெருகி வரும் தண்ணீர் நெருக்கடியைக் குறைக்க 3 ட்ராக்டர்களும், ஆறு டிரைவர்களும், உயரத் தொட்டிகளுக்கு தண்ணீர் ஊற்றும் பம்புடன் கொண்ட ஒரு லாரியும் வாங்கி அதன் மூலம் தண்ணீர் வினியோகம் செய்யவும் முடிவு செய்யப்பட்டது. —ந. நி.

# தலையை வெட்டி பொதுவிடத்தில் தொங்கவிடுவார்களாம்

## கேரள கிளர்ச்சிக்காரர்கள் வெளியிட்ட நோட்டீஸ்

கொல்லம், ஜூன் 20—

இங்கு கேரளக் கிளர்ச்சிக்காரர்களின் விமோசன சமிதியின் சார்பாக ஒரு நோட்டீஸ் அச்சடித்து வெளியிடப்பட்டிருக்கிறது. இது அடூர் கே. வி. பிரசில் அச்சடிக்கப்பட்டிருக்கிறது.

இந்த நோட்டீசில் கேரள மந்திரிகளைப் பற்றி மிகவும் கேவலமான பாஷையில் தூற்றப்பட்டிருக்கிறது.

''போலீசின், கள்ளுத்தொழிலாளர் படைகளின் பாதுகாப்பு வளையத்தைத் தகர்த்து உடைத்துக்கொண்டு, நிரபராதிகளான மக்களுக்கு எதிராக தீச்சூளை பாய உத்தரவு கொடுத்த ஜனத்துரோகிகளின் தலைகளை வெட்டி பொது இடத்தில் தொங்கவிட இன்றில்லாவிட்டால் நாளை நாட்டில் ஆட்கள் இருப்பார்கள் என்பதை நம்பூதிரியும் அவரது கூட்டாளிகளும் ஞாபகத்தில் வைப்பது நல்லது'' என்று இத் துண்டுப் பிரசுரத்தில் அச்சடிக்கப்பட்டுள்ளது.

விமோசனப் போர் நடத்துவோரின் அகிம்சா போதம் இவ்வாறு கேரளத்தில் வெளியாகி…

# படகுகளை நிறுத்த முயன்ற காலிகளுக்கு பிரயாணிகள் எதிர்ப்பு

ஆலப்புழை, ஜூன் 23—

நீர் போக்குவரத்துக் கார்ப்பொரேஷனைச் சேர்ந்த சில போக்குவரத்துப் படகுகளை மொங்கொம்பு, புலின் குன்னு ஆகிய கரையோர கிராமங்களில் சில காலிகள் தடுத்து நிறுத்தி இடைஞ்சல் செய்தனர். ஆனால் அந்தப் படகுகளிலிருந்த பிரயாணிகளே அந்தக் காலிகளை எதிர்க்க ஆரம்பிக்கவே, அவர்கள் படகுகளை விட்டுவிட்டு கம்பி நீட்டினர்.

சில வெறிபிடித்த மாணவர்கள் அரசாங்க பஸ்கள் முன்பும் படுத்து போக்குவரத்துக்கு இடைஞ்சல் செய்ய முயற்சித்தனர். போலீசார் அவர்களை அப்…

# வரலாற்று முக்கியத்துவம் பெறும் கேரள ராஜ்யத்தின் நிலச்சீர்திருத்தச் சட்டம்

## [ கேரள ரெவின்யூ மந்திரி கௌரியின் பேருரை ]

வரலாற்று முக்யத்துவம் பெறும் ''கேரள விவசாய உறவுகள் மசோதா'' இவ்வாண்டு ஜூன் 10-ந் தேதியன்று கேரள சட்ட சபையில் இறுதியாக நிறைவேற்றப்பட்டது.

அந்த மசோதா நிறைவேற்றப்படுங் காலத்தில் சட்ட சபையில் எதிர்க்கட்சி உறுப்பினர்கள் 18 பேர் மட்டுமே இருந்தனர். எதிர்க்கட்சிகளின் தலைவர்கள் யாருமே அங்கு இல்லை. கேரள எதிர்க்கட்சிகளைச் சேர்ந்தவர்கள் எவ்வளவு பொறுப்பற்ற தன்மையில் நடந்து கொள்கிறார்கள் என்பதற்கு இதைவிடச் சிறந்த உதாரணம் வேறு என்ன வேண்டும்?

மசோதா நிறைவேற்றப்பட்டு, சட்டசபை ஒத்தி வைக்கப்பட்ட பிறகு, கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.க்கள் சட்டசபை மண்டபத்திற்கு வெளியில் வந்தபொழுது, ஆயிரக்கணக்கான மக்கள் வெளியில் அளவு கடந்த மகிழ்ச்சியுடன், அவர்களைப் பாராட்டும் முறையில் கரகோஷ ஆரவாரம் செய்தனர்.

### விரிந்த அடிப்படையில் விவாதம்

கேரளவிவசாய உறவுமசோதா முதல் முதலாக 1957, டிசம்பர் 18-ல் விசேஷ சர்க்கார் கெஜெட்டில் பிரசுரிக்கப்பட்டது. டிசம்பர் 21ல் சட்டசபையில் பிரேரேபிக்கப்பட்டது. அந்த மசோதாவைப் பற்றிய பூர்வாங்க விவாதம் 1957 டிசம்பரிலும், 1958 மார்ச்சிலும் நடைபெற்றது. 1958 ஏப்ரல் 2-ல், மசோதாவை ஒரு பொறுக்குக் கமிட்டியின் பரிசீலனைக்கு விடுவதென்று சட்டசபை முடிவு செய்தது.

இதற்கிடையில் கேரள கர்ஷக சங்கமும், (விவசாயிகள் சங்கம்) கம்யூனிஸ்ட் கட்சியும் இந்த மசோதாவைப் பற்றி ராஜ்யம் பூராவிலும் விவாதத்தைத் துவக்கினர். விவசாயிகளுக்கு மசோதாவிலுள்ள ஷரத்துகளை விளக்கிக் கூறினர். மசோதாவை மேலும் செழுமையாக்குவதற்கு மக்கள் கூறிய ஆலோசனைகளையும், அவர்களின் விமர்சனங்களையும், அவர்களின் சந்தேகங்களையும் குறித்துக் கொண்டனர்.

இவ்வாறாக இம்மசோதாபெரிய அளவில் மக்கள் பங்கெடுத்துக் கொண்டு தயாரித்த ஒரு கருவியாக ஆயிற்று. அ. இ. கிசான் சபையும் இதை விவாதித்து ஆலோசனைகளும், திருத்தங்களும் கூறிற்று.

இம்மசோதாவின் பரிசீலனைக்காக ஏற்படுத்தப்பட்ட பொறுக்குக் கமிட்டி ராஜ்யத்தின் எல்லா ஜில்லாக்களிலும் சுற்றுப் பிரயாணம் செய்து, நிறையத் தகவல்களைச் சேகரித்தது. கமிட்டி மொத்தம் 60 தடவைகூடியது. 269 சாட்சிகளை அது விசாரணை செய்தது. ஆயிரக்கணக்கான மகஜர்கள் அதனிடம் சமர்ப்பிக்கப்பட்டன. மசோதாவின் பல ஷரத்துகள் திருப்பி எழுதப்பட்டன. புதிய ஷரத்துகள் சேர்க்கப்பட்டன. ஏற்கனவே இருந்த சில ஷரத்துகள் நீக்கப்பட்டன.

### ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது

377 நாட்களுக்குப் பிறகு பொறுக்குக் கமிட்டி தன்னுடைய அறிக்கையை 1959 ஏப்ரல் 14-ல் சட்டசபை முன் சமர்ப்பித்தது.

விவாதத்தின்போது, 3000-க்கு மேற்பட்ட திருத்தங்கள் சட்டசபையில் பிரேரேபிக்கப்பட்டன. திருத்தங்களின் வெளிச்சத்தில் அசல் மசோதாவின் பல ஷரத்துக்கள் திருத்தி எழுதப்பட்டன. இறுதியாக ஷரத்து வாரியான விவாதம் 1959 மே 8-ல் முடிவடைந்தது. ஜூன் 10-ல் இறுதியாக (3-வது தடவையாக) மசோதா வாசிக்கப்பட்டு, ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. ஒருவர்கூட எதிர்த்து ஓட்டளிக்கவில்லை.

### பிரதான அம்சங்கள்

இதுவரையிலும் எந்த மசோதாவின் மீதும் இவ்வளவு நீண்டகால விவாதங்கள் நடைபெற்றதில்லையென பார்வையாளர்கள் கூறுகின்றனர். கேரளத்தின் வரலாற்றிலேயேஎப்பொழுதும் சட்டசபை இவ்வளவு நாட்கள் தொடர்ந்து கூடியதும், ஒவ்வொருநாளும் இவ்வளவு நீண்ட நேரம் விவாதம் செய்ததும் கிடையாது. இந்த மசோதாவை நிறைவேற்றிய மகத்தான சம்பவத்தில் பங்கு கொண்ட யாவரும் வரலாற்றை படைத்ததாக உண்மையாகவே பெருமைப்பட முடியும்.

மிகச்சிலவிதிவிலக்குகள் தவிர, நிலவுடைமைக்கு உச்சவரம்பை நிர்ணயிப்பது இம்மசோதாவின் முக்கியமான விசேஷ அம்சங்களில் முதலாவதாகும்.

இரண்டாவதாக, சகலவித குடியானவர்களும் தாங்கள் உழும் நிலத்தின் பாத்தியதைஉரிமையை இலகுவாக விலைக்கு வாங்குவதற்கு அவர்களுக்கு வசதி செய்து கொடுக்கப்பட்டுள்ளது.

சிறு நிலக்காரர்களின் உரிமைகளைப் பாதுகாக்கும் விசேஷ ஷரத்துக்களும் இந்த மசோதாவில் உள்ளன. இவ்வாறாக, இந்தச் சட்டம், கேரள ராஜ்யத்தில் மிகவும் விரிவான பகுதி விவசாய மக்களுக்குக் கணிசமான நன்மைகளை வழங்குகிறது.

உபரி நில வினியோகத்திலும் விவசாயத் தொழிலாளிகளுக்கும், ஏழை விவசாயிகளுக்கும் விசேஷ சலுகை கொடுக்கப்படுகின்றது. நியாயவாரம் நிர்ணயிப்பது, ராஜ்யம் பூராவிலும் ஒரே மாதிரியான அடிப்படையில் சகல விதக் குடியானவர்களுக்கும் நிரந்தரக் குடிவார உரிமை வழங்குவது சம்பந்தமான ஷரத்துக்களும் இந்தச் சட்டத்தில் உள்ளன. இவ்வாறாக, இந்தியாவில் எந்த ராஜ்யத்திலும் இன்னும் முயற்சி செய்யாத ஒரு சர்வாம்ச நிலச் சட்டமாகும் இது.

பெரிய நிலப் பிரபுக்களை இச்சட்டம் பலமாகத் தாக்குகிறது என்பது வாஸ்தவம்தான். அதனால் அவர்கள் அடிபட்ட மிருகம் போல வலியின் காரணமாக ஊளையிடவும், எதிர்த்துச் சண்டை போடவும் செய்கிறார்கள் என்பது உண்மையே. அதுதான் தற்போதைய ''விமோசன''க்கிளர்ச்சியின் பின்னுள்ள இரகசியமுமாகும்.

### கௌரியின் பேருரை

கேரள ரெவினியூ மந்திரி தோழர் கௌரி விவாதத்திற்கு பதிலளிக்கையில், காங்கிரஸ் உறுப்பினர்களைப்பார்த்து, அவர்கள் வெட்கித் தலைகுனியும் வண்ணம் பின்வருமாறு கூறினர்:

''கராச்சியிலிருந்து நாகபுரி வரைப் பிரயாணம் செய்து வந்த பிறகு கூட, இந்த மசோதாவில் நல்ல அம்சங்களைப் பார்க்க முடியாத காங்கிரஸ்காரர்களும் இருக்கிறார்களென்றால், அது, கம்யூனிஸ-எதிர்ப்பினால் அவர்கள் கண்ணிழந்து இருப்பதே காரணம்'' என்றார்.

தோழர் கௌரி மேலும் கூறியதாவது. ''சில திருத்தங்கள், குறிப்பாக காங்கிரஸ் உறுப்பினர்கள் பக்கத்திலிருந்து வந்த திருத்தங்கள் பிற்போக்கானவையாயிருந்தன என்று நான் கூறினால் யாரும் அதனால் வருத்தப்படக்கூடாது. உதாரணமாக சர்வ ஸ்ரீ கே. எம். ஜார்ஜ், கே. ஆர். நாராயணன், அலெக்ஸாண்டர் பரம்பித்தாரா, கே. சி. அப்ரஹாம் ஆகியோர், குடிகிடப்புக்கார் (நிலச்சுவான்தாரின் நிலத்தில் குடிசை போட்டுக் கொண்டு வசிப்பவர்கள்) சம்பந்தமான ஷரத்துகளுக்குக் கொண்டு வந்த திருத்தங்கள், நிச்சயமாக குடிகிடப்புக்காரர்களின் நலன்களுக்கு விரோதமானவையே.

### திருத்தங்கள் பற்றி

''எதிர்க்கட்சிகளால் கொண்டு வரப்பட்ட பல திருத்தங்களை நாங்கள் ஏற்றுக் கொண்டுள்ளோம் எதிர்க்கட்சியினரின் திருத்தங்களிலுள்ள கோட்பாடுகளை இணைத்து, மசோதாவிலுள்ள பல ஷரத்துக்களைத் திருத்தி எழுதியுள்ளோம். ஆயினும் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பலருடைய நடத்தை ஒத்துழைப்பு மனோபாவத்தைப் பிரதிபலிக்கவேயில்லை.

''உதாரணமாக, எதிர்க்கட்சியினர் கொண்டுவந்த சில திருத்தங்களை ஏற்றுக் கொள்ளும் …ளுடைய திருத்தங்களைப் பிரேரேபிக்காமலேயே இருந்தோம். ஆனால் கடைசியில் அந்த எதிர்க்கட்சி உறுப்பினர்கள்பின்வாங்கி விட்டனர்; திருத்தங்களை சபையில் பிரேரேபிக்கவில்லை. அல்லது சில திருத்தங்களை வாபஸ் பெறவும் செய்தனர். இதனால் எங்களுக்கு மிகவும் கஷ்டமான நிலைமை ஏற்பட்டது.

''இந்தச் சட்டத்திற்கு இன்னும் திருத்தங்கள் தேவைப்படும் என்று திரு விஸ்வநாதன் கூறினார் அதை நான் ஏற்றுக் கொள்கிறேன். சட்டம் நடைமுறையில் அமுல்படுத்தப்படும் பொழுது, ஏதாவது கஷ்டங்கள் ஏற்பட்டால் அத்தகைய கஷ்டங்களை நிச்சயமாக நாங்கள் அகற்றுவோம். இந்த மசோதாவில் சில குறைபாடுகள் இருக்கலாம். ஆனால் இந்த மசோதாவைத் தயாரிக்கும் பொழுது. அத்தகைய குறைபாடுகளைப் போக்குவதற்கு மனித யத்தனத்தினால் முடியக்கூடிய சகலமும் நாங்கள் செய்துள்ளோம்.

சர்க்கார் காரியாலயமும், சர்க்காரும் மிகுந்த கவனத்துடன் இந்த மசோதாவைத் தயாரித்துள்ளனர். மேலும் சபையில் விவாதத்தின் போது பல அங்கத்தினர்கள் இந்த மசோதாவை மிகவும் நுணுக்கமாகப் பரிசீலனை செய்துள்ளனர். இது சம்பந்தமாக திரு டி. ஏ. தொம்மான் (காங்கிரஸ்), திரு. எம் நாராயண குருப் (பி-சோ) ஆகியோரின் உதவியை நான் விசேஷமாகப் பாராட்டுகிறேன். அவர்கள் திருத்தங்களைக் கொண்டு வரவில்லை. ஆனால் அப்போதைக்கப்போது மசோதாவின் ஷரத்துகளிலுள்ள குறைபாடுகளைச் சுட்டிக் காட்டினர்.

### சர்க்காருக்கு அதிகாரங்கள்

மசோதாவின் சில ஷரத்துகள் சர்க்காருக்கு சில அதிகாரங்கள் வழங்குவதை எதிர்க்கட்சி உறுப்பினர்களில் சிலர் கடுமையாக எதிர்த்தனர் அந்த அதிகாரங்களைக் கம்யூனிஸ்ட் கட்சியின் நன்மைக்காக சர்க்கார் உபயோகப்படுத்துவார்கள் என்று எதிர்க்கட்சியினர் அடித்துப் பேசினர்.

''ஆனால் இந்த சட்டத்தில் இன்னொரு விதியும் இருக்கிறது. அதாவது, இந்தச் சட்டம் சர்க்காருக்கு அளிக்கும் அதிகாரங்களைப் பயன்படுத்தி சர்க்கார் வெளியிடும் உத்தரவுகளெல்லாம், அவைகள் வெளியிடப்பட்ட 10 நாட்களுக்குள் சட்டசபையின் முன் கொண்டுவரப்படவேண்டும், என்பதே அந்த விதி ஆனால் காங்கிரஸ் ஆட்சி செய்யும் சில ராஜ்யங்களில், உள்ள குடிவாரச் சட்டங்களில், சர்க்காருக்கு அவ்விதக் கடமைகள் ஒன்றும் இல்லை. உதாரணமாக, ஹைதராபாத், பம்பாய் குடிவாரச் சட்டங்களின் சில ஷரத்துகளைப் பாருங்கள்.

### கொயபல்ஸ் தத்துவம்

''அந்த ராஜ்ய சர்க்கார்களுக்கு அத்தகைய அதிகாரங்களைக் கொடுப்பதற்கு எதிர்க்கட்சி அங்கத்தினர்களுக்கு எவ்வித ஆட்சேபணையும் கிடையாது. ஆனால் இந்த சர்க்காருக்கு அதைவிடக் குறைந்த அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தும் அந்த அதிகாரங்கள் எங்கள் கட்சிக்கு சாதகமாகத் துஷ்பிரயோகம் செய்யப்பட்டு விடும் என்று அவர்கள் கூறுகிறார்கள். 'ஒரு பொய்யை நூறுதடவைகள் திருப்பித் திருப்பிக் கூறினால், அது உண்மையாகி விடும்' என்ற கேடுகெட்ட கொயபல்ஸ் தத்துவத்தை அவர்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் போல் தோன்றுகிறது.

''நம்முடைய நண்பர்களின் கண்களுக்கு இன்னும் நம்மிடையில் ஜாதி இந்துக்களும், தீண்டப்படாதவர்களும்இருப்பதாகத் தோன்றுகிறது. இதர ராஜ்யங்களை ஆட்சி புரியும் காங்கிரஸ்காரர்கள் அனைவரும் ஜாதி இந்துக்கள்; ஆனால் கேரளத்தில் ஆட்சி புரியும் கம்யூனிஸ்ட்கள் தீண்டப்படாதவர்கள்'' என்று தோழர் கௌரி கூறினர்.

நில ட்ரிப்யூனல்கள் பற்றிய புகார்களைப் பற்றி கௌரி குறிப்பிட்டு, அதைவிட மிகவும் ஜனநாயகபூர்வமான வேறொன்றைக் கூற முடியுமா என்று எதிர்க்கட்சியினரைக் கேட்டார்.

### பயம் ஏன்?

முதலில் இந்த ட்ரிப்யூனல்களை சர்க்கார் தாங்களே ஏற்படுத்தலாம் என்று நினைத்தனர். ஆனால் அது ஜனநாயகபூர்வமானதாக இருக்காது என்ற காரணத்தினால், அந்த ட்ரிப்யூனல்களின் அங்கத்தினர்களில் மூன்றில் இரு பகுதியினரைப் பஞ்சாயத்துகள் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று விதி வகுத்தோம். தவிர ஒவ்வொரு ட்ரிப்யூனலுக்கும் சர்க்கார் ஒரு சட்ட நிபுணரையும் நியமித்தார்கள்.

இதைக் கண்டு எதிர்க்கட்சியினர் பயப்படுவதின் காரணமென்ன? இந்த ராஜ்யங்களின் பஞ்சாயத்துகளிலெல்லாம் கம்யூனிஸ்டுகள் மெஜாரிடியாக வந்து விடுவார்கள் என்ற பயம்தானே?

கராச்சியிருந்து நாகபுரிவரையிலும் வந்தபின்னும்கூட இன்னும் இந்த மசோதாவில் நல்ல அம்சங்கள் உள்ளன என்பதை சில காங்கிரஸ் காரர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆயினும் இதனால் ஏற்படும் நன்மைகளைப் புரிந்துகொள்ளக்கூடியவர்களும் இருக்கிறார்கள் என்பதை நான் மறக்கவில்லை.

### அப்பட்டமான வகுப்பு வாதம்

இந்த மசோதாவுக் கெதிராக அப்பட்டமான வகுப்பு வாதப் பிரசங்கங்கள் புரிபவர்களும் இருக்கிறார்கள் திரு சாழிக் காடனின் கருத்துக்களுக்கு நான் வழக்கமாகவே அதிக முக்யத்துவம் கொடுப்பதில்லை. இந்த மசோதா நாயர்களை நாசமாக்கி விடும் என்று அவர் கூறிய பொழுது, அவர் தன் வரம்புகளையே மீறி விட்டார்.

''கடந்த காலத்தில், நிலச்சீர்திருத்த மசோதாக்கள் கொண்டுவந்த சர்க்கார்கள், வகுப்புவாதத்தின் பெயரால் தூக்கி யெறியப் பட்டுள்ளன. காங்கிரசும், பி. சோ. கட்சியும் நாயர் சேவா சங்கத் தலைவர் மன்னத்து பத்மநாபனுடன், இந்தச் சட்டம் அமுல்படுத்தப் படாமல் தடுப்பதற்கு அவர் நடத்தும் வகுப்புவாதக் கிளர்ச்சியில் ஒன்று சேர்ந்து நிற்பது துரதிர்ஷ்டமானதே.

இந்த ராஜ்யத்தைக் காங்கிரஸ் கட்சி ஆட்சி புரிந்து கொண்டிருக்குமேயானால் இந்த மசோதா கொண்டு வரப்பட்டே யிருக்காது அல்லது இது சட்டசபையில் நிறைவேற்றப் பட்டும் இருக்காது.

### கடந்த காலத்தில்

நாங்கள் இந்த நல்ல காரியத்தைச் செய்யும்போது, இப்பொழுது நீங்கள் எங்களை எதிர்க்கிறீர்கள். கடந்த காலத்தில் இத்தகைய சட்டத்தைக் கொண்டுவர முயற்சித்தவர்களுக்கு ஏற்பட்ட கதியையும் நாங்கள் அறிவோம்.

''பட்டம் தாணுப்பிள்ளை இந்த ராஜ்யத்தில் ஆட்சி நடத்திக் கொண்டிருந்த பொழுது, ஏறக்குறைய இத்தகைய ஒரு மசோதா கொண்டுவரப்பட்டு பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பப் பட்டது. ஆனால் பொறுக்குக் கமிட்டியின் கூட்டம் நடத்துவதற்கு அவருக்குக் 'கோரம்' கூடக் கிடைக்கவில்லை.

இன்று, அந்த பொறுக்குக் கமிட்டியின் காங்கிரஸ் அங்கத்தினர்களான எம். பி. சந்திரசேகரன் பிள்ளை, என். நாராயண குருப் ஆகியோர் எதிர்ப் புரட்சி 'விடுதலைப்போராட்டத்தின் தலைவராகிய மன்னத்துப் பத்மநாபனின் வாலைப்பின்பற்றிச் செல்பவர்களாயிருக்கிறார்கள்.

''இத்தகைய மசோதாக்களைக் கொண்டுவர முயற்சித்த எந்த சர்க்காரையும் இந்த சக்திகள் எப்பொழுதும்குப்புறக்கவிழ்த்து வந்துள்ளன.

நில மசோதாக்களைக் கொண்டுவந்த 3 மாதங்களுக்குள் பி.சோ.மந்திரிசபை தூக்கி யெறியப்பட்டது. தற்பொழுது காங்கிரஸ் எம். எல். ஏ.ஆக உள்ள ஏ. ஏ. ரஹீம் ஒரு மந்திரியாயிருந்த சர்க்கார் ஒரு மசோதாவைக் கொண்டுவந்தபோது இதே பிற்போக்கு சக்திகள் சதி புரிந்து, அந்த சர்க்காரைத் தூக்கியெறிந்தன.

### எங்கள் சாதனை

கம்யூனிஸ்ட் மந்திரிசபை ஒன்றுதான் அத்தகைய சதிகளைச் சமாளித்துநிற்க முடியும். இந்தக் கம்யூனிஸ்ட் மந்திரி சபையில் ஒரு அங்கத்தினராக இருப்பதற்கு நான் மிகவும் பெருமைப்படுகிறேன்.

''நீங்கள் என்னை ஒரு கம்யூனிஸ்ட் ஆக்கினீர்கள்'' என்ற நாடகத்தில் பிரபலமான ஒரு பாட்டு வருகிறது. அதில் விவசாயத் தொழிலாளிகள் ''நாம் அறுவடை செய்யும் வயல்கெலலாம் நமக்கே சொந்தமாகும்,'' என்று பாடுகின்றனர்.

அந்தப் பாட்டு இப்பொழுது, நம் ராஜ்யத்திலுள்ள ஆயிரக்கணக்கான விவசாயிகளுக்கும் வாரதாரர்களுக்கும் அர்த்த புஷ்டியுள்ளதாக ஆகியுள்ளது.

இந்தச் சட்டத்தை அமுல் நடத்துவதற்கு இந்த சட்டசபையும், எல்லா அங்கத்தினர்களும் உதவி செய்வார்கள் என்று நம்புகிறேன், என்று கூறிய தோழர் கௌரி அந்தசட்டத்தை நிறைவேற்றுவதற்கு உதவிய அனைவருக்கும் நன்றி கூறினர்.

# நீங்கள் இருந்தால் ஜனநாயகம்! கம்யூனிஸ்டுகள் வந்தால் சர்வாதிகாரமா?

## தோழர் ரமணி கேள்வி

கோவை ஜூன் 22—

இன்று 19-6-59 மாலை 7 மணியளவில் [illegible]சாமிக் கவுண்டர் புதூரில் [illegible] கேரள [illegible] வாரத்தை ஓட்டியும், [illegible] பஞ்சாயத்து போர்டு தேர்தலை [illegible] ஒட்டியும் பொதுக் கூட்டமொன்று [illegible] தோழர் சுப்பண கவுண்டர் தலைமையில் நடைபெற்றது.

சர்க்கார் [illegible]மக்குளம் பிர்க்கா கமிட்டிசெய[illegible]ளர் தோழர் எஸ். கிருஷ்ணன் அவர்கள் பேசுகையில் தேர்தலில் [illegible]டாம் ஊருக்குள் பிளவு எதற்கு என்று சொல்லிக்கொண்டே பி. [illegible]க்களும் காங்கிரஸ்காரர்களும் பஞ்சாயத்தைக் கைப்பற்றி கான்ட்ராக்ட் மூலம் சம்பாதிக்க ஆசைப்படுகின்றனர் என்றார்.

அடுத்து தோழர் எல். [illegible] பேசுகையில் பி. சோ. வைப் போல சிதைந்த கட்சி வேறு இல்லை. கேரளத்தில் பி. சோ.க்கள் காங்கிரஸோடு கூட்டுச்சேருகின்றனர். உத்தரப் பிரதேசத்தில் காங்கிரஸை எதிர்த்து நம்பிக்கையில்லா தீர்மானத்தை கொண்டு வருகின்றனர். வெட்டுக் குத்தில் ஈடுபட்ட கட்சியெல்லாம் கேரள கம்யூனிஸ்ட்சர்க்காருக்குஎதிராக திரளுகின்றன, சரண்டலுக்கு வக்காலத்து வாங்கும் கட்சியெல்லாம் ஒன்று, அதை எதிர்த்து போராடும் கட்சி ஒன்று. அது கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான் என்றார்.

முடிவில் கோவை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் கே. ரமணி விரிவுரையாற்றினர்.

அவர் பேசுகையில், வெள்ளைக்காரனை எதிர்த்து போராட்டம் நடந்த காலத்தில், போராட்டத்தில் அஹிம்சை இருக்கவேண்டும். அப்போதுதான் வெற்றி கிடைக்கும் என்றார் காந்தி. கேரளத்தில் நடப்பதென்ன? அஹிம்சையா? என்று கேட்டார்.

மந்திரிசபையை பாதுகாக்க ஓரிசாவில் காங்கிரஸ் பரிஷத்தோடு ஒட்டுப் பிளாஸ்திரி போடுகிறது. பட்டம் தாணுவை கேரளத்தில் மந்திரியாக்கி பின்னாலிருந்துகொண்டு 45 பேர் கையைத் தூக்கி ஒட்டுப்பிளாஸ்திரி மந்திரிசபை அமைத்தனர். மெஜாரிட்டி இல்லாவிட்டாலும் காங்கிரஸும், பி. சோ.வும் மந்திரிசபை அமைக்கலாமாம்! 4 பேர் மெஜாரிட்டியிருந்தாலும் கம்யூனிஸ்டுகள் மந்திரிசபை அமைக்கக்கூடாதாம்! நீங்கள் இருந்தால் மட்டும் ஜனநாயகம்? கம்யூனிஸ்டுகள் வந்தால்மட்டும் சர்வாதிகாரமா? என்றார்.

ஆயிரக்கணக்கான ஏக்கர் தென்னந்தோப்புகள் பாதிரிகளுக்குச் சொந்தம், கோழிப் பிரியாணியும், வைனும் சாப்பிட்டு வயிறு வீங்கிப் போயிருக்கிறார்கள், அவர்களுக்கு இத்தனை சுகபோகமும் எங்கிருந்து கிடைத்தது? ஏழைகளைச் சுரண்டிக் கொழுத்தது தானே?

இப்படி சுரண்டிக் கொழுத்த பாதிரிகள் கம்யூனிஸ்ட் சர்க்காரை எதிர்க்க கச்சை வரிந்து கட்டுகின்றனர், பாதிரிகள் மதவாதிகளல்லவா? மதவாதிகள் அரசியலில் தலையிடலாமா? மதத்திற்கும் அரசியலுக்கும் சம்பந்தமில்லை என்பதல்லவா நம் அரசியல் சட்டம்! என்றார்.

கேரளத்தில் பிற்போக்குவாதிகள் பலாத்காரத்தை ஜனநாயக பாதையாக்கியுள்ளனர். கேரளப் பாதைதான் இந்தியாவுக்கு பாதையா?

கேரளத்தில் குற்றப்பத்திரிகை படிக்கிற காங்கிரஸ்—13 ராஜ்யங்களில் தங்களுடைய ஆட்சி யிருப்பதை மறந்து விட்டனரா? என்றார்.

மேலும் தோழர் ரமணி பேசுகையில் கேரள சர்க்கார் கொண்டு வந்துள்ள நிலச்சீர் திருத்த சட்டம், கல்விச் சட்டம் போன்றவற்றை விளக்கினார்.

கூட்டம் இனிது முடிந்தது. சுற்றுப்புற கிராமங்களிலிருந்து ஏராளமான விவசாயிகளும், தொழிலாளிகளும், மாற்றுக் கட்சி நண்பர்களும் கலந்து கொண்டனர்.

## ஹார்வி மில்கதவடைப்பை உடனேரத்துசெய்க

### சிங்கை சர்வகட்சிக்கூட்டத்தில் கோரிக்கை

விக்ரமசிங்கபுரம், ஜூன் 20—

விக்ரமசிங்கபுரத்தில்18-6-59ல் சர்வகட்சிக் கொடிகளுடன், சர்வகட்சி சார்பில் ஒரு பெரிய ஊர்வலம், "புதிய வேலைப் பளுவை வாபஸ் வாங்கு, சர்க்காரே தலையிடுக, கதவடைப்பை ரத்து செய்க," என்ற கோஷங்களுடன் முக்கிய வீதிகள் வழியாகச்சென்றது.

இரவு 7 மணிக்கு தேரடி மைதானத்தில் திரு. ரஹீம் (திமுக) தலைமையில், சுமார் 5000 பேர் திரண்ட ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. திருவாளர்கள் எம். இராமையா (பி. எல். யூ.), அனந்த கிருஷ்ணன், தளவாய் (ப. தொ. ச) எஸ். தாசன் (பி. சோ.), பி. சொர்ணம் (கம்யூனிஸ்ட்), சு. கந்தசாமி (திமுக) ஆகியோர் பேசினர்.

ஹார்வி மில் கதவடைப்பு செய்யப்பட்டிருப்பதைக் கண்டித்தும் போராடும் தொழிலாளர்களுக்கு ஆதரவு தெரிவித்தும், சீக்கிரம் மில்லைத் திறக்கும்படி செய்ய அரசாங்கம் உடனே நடவடிக்கை எடுக்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

— ந. வீ

## கம்யூனிஸ்ட் கட்சி கிளை திறப்பு விழா

நெல்லிக்குப்பம், ஜூன் 20—

நெல்லிக்குப்பத்திற்கு 2 மைல் அருகில் உள்ள-மேட்டுப்பாளையம் கிராமத்தில் 7—6—59 ஞாயிறு மாலை 6 மணிக்கு கட்சி கிளை திறப்பு விழாவும் பொதுக் கூட்டமும் நடைபெற்றது.

அன்று மாலை 5 மணிக்கு-மேல் பாதியிலிருந்து ஓர் ஊர்வலம் புறப்பட்டு மேல்பாதி-கீழ்பாதி-நெசனூர்-சுந்தரர்பாடி ஆகிய ஊர்களின் வழியாக கட்சி கோஷங்களை கோஷித்துக் கொண்டு மேற்படி மேட்டுப்பாளையத்தை வந்தடைந்தது. மேட்டுப்பாளையத்தின் எல்லா முக்கிய வீதிகளிலும் ஊர்வலம் சென்று ஊரையே ஒரு கலக்கு கலக்கிவிட்டது. இதுவரை இவ்வூரில் என்றுமே இம்மாதிரி ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடந்ததே கிடையாது. இதுவே முதல் தடவை.

இரண்டு இடங்களில் கட்சிக் கொடிகள் ஏற்றப்பட்டன. வெடிகளும், அதிர் வேட்டுகளும் முழங்க, கம்யூனிஸ்ட் கட்சி வாழ்க போன்ற கோஷங்கள் முழங்க கிளை திறப்புவிழா நடைபெற்றது.

பொதுக் கூட்டத்திற்கு தோழர் கோபால் தலைமைவகிக்க, தோழர்கள் ஆர். பஞ்சாட்சரம், வி. ஜெயராமன், பி. புருஷோத்தமன், சி. கோவிந்தராஜன் ஆகியோர்கள்: கம்யூனிஸ்ட் கட்சியின் சரித்திரம் இந்தியாவில் கட்சிக்கு ஏற்பட்ட அடக்கு முறைகள் அனைத்தும் தாங்கி இரண்டு பொது தேர்தல்களிலும் நமக்கு கிடைத்துள்ள வெற்றிகள்-கேரளத்தில் 2½ ஆண்டுகளாக நம் கட்சி அதிகாரத்திற்குவந்த பிறகு சாதித்துள்ள சாதனைகள்-மற்ற 13 ராஜ்யங்களில் 12 வருடங்களாக காங்கிரஸ்காரர்கள் சாதிக்க முடியாத சாதனைகளை எவ்வாறு சின்னஞ்சிறு கேரளம் சாதித்தது? என்ற விபரங்களையும் கேரளத்தைப் போன்று மற்ற 13 ராஜ்யங்களிலும் கம்யூனிஸ்ட் சர்க்காரை அமைக்க வேண்டுமானால் இம்மாதிரியான கிராமங்களில் எல்லாம் கட்சிக் கிளை அமைத்து இளைஞர்கள் அனைவரும் கட்சியில் சேர்ந்து இந்தியாவில் ஜனநாயக சர்க்கார் அமைக்கப் பாடுபட வேண்டும் என்றும் நீண்ட நேரம் சொற்பொழிவாற்றினர்கள்.

## பஞ்சம், பட்டினி, பரிதவிக்கிறோம்!

## உடனடி நிவாரணம் தருக!

### பெருந்துறையில் 4 ஆயிரம் மக்கள் ஆர்ப்பாட்டம், அணிவகுப்பு

பெருந்துறை, ஜூன் 22—

பெரியபாளையம்,ஊத்துக்குழி, பாப்பம் பாளையம், ஆதியூர், குன்னத்தூர், கருக்கப்பாளையம் வெள்ளாரவெளி திங்களூர் சீனுபுரம், காராண்டி பாளையம் முதலியஊர்களிலிருந்து 4000க்கு மேற்பட்ட விவசாயிகளும் தொழிலாளிகளும் ஜூன் 16-ல் என். கே. பழனிசாமி எம். எல். ஏ. தலைமையில் 800க்கு அதிகமாக செங்கொடிகளுடன், கால் நடையாக 20 மைல் நடந்து கிணறுகளை ஆழப்படுத்தவும் புதிய கிணறு தோண்டவும், குட்டைகள் ஏற்படுத்தும்படியும், பெருந்துறை, ஊத்துக்குழி பிர்க்காவில் 20 நிவாரணக் கடைகள் ஏற்படுத்த வேண்டுமென்றும், மரமேறும் தொழிலாளிகளுக்கு லைசென்ஸ் கொடுக்கும் பொழுது தாமதப்படுத்தி துன்பம் செய்வதை கண்டித்தும் இந்த மின்சாரத் திட்டத்தின் மூலம் கிடைக்கும் தண்ணீரை வறண்ட ஈரோடு பகுதிகளுக்கு கொண்டு வரும்படியும் விவசாயிகள் கிணறுகள் கட்ட கடன் உதவி செய்யும்படியும், மாட்டுத் தீவனம் குறைந்த விலையில் கிடைக்க சர்க்கார் வாகன் வசதிகள் செய்யவேண்டு மென்றும், கடன் நிவாரண சட்டத்தை இன்னும் 4 வருடங்களுக்கு நீடித்து, விவசாயிகளை கடன் தொல்லையிலிருந்து பாதுகாப்புக் கொடுக்க வேண்டு மென்றும், ஹரிஜனங்களுக்கு வீட்டு இடம், வீட்டுவசதி கோரியும்வழிநெடுகலும்கோஷித்துக்கொண்டே வந்தார்கள் வழிநெடுகிலும் விவசாயிகளுக்கு ஆயிக் கவுண்டன் பாளையம் முதலிய ஊர்களில் வரவேற்பு கொடுத்தார்கள். பிறகு நேராக பெருந்துறை டிப்டி தாசில் தார் அவர்களை நேரில் சந்தித்து என். கே. பழனிசாமி எம். எல். ஏ. செல்லப்ப கவுண்டர், பெரியதம்பி, முருகசாமி, கருப்பண்ணன், பழனியப்ப முதலியார், கொண்டசாமி, சுந்தரம், கிருஷ்ணன், சேப்பாயி ஆகிய விவசாய பிரதிநிதிகள் தாசில்தார் அவர்களிடம் குறைகளை யெல்லாம் எடுத்துச் சொல்லி தாசில்தார் அவர்களையே விவசாயிகளிடம் கோரிக்கைக்கு பதில் கூறும்படி சொன்னார்கள். தாசில்தார் அவர்களும் கூட்டத்தில் தன்னால் முடிந்த அளவு உதவி செய்வதாகச் சொன்னார்.

பிறகு பெருந்துறை காந்தி மைதானத்தில் மாபெரும் பொதுக்கூட்டம் நடந்தது பெருந்துறை பஞ்சாயத்து வைஸ் பிரசிடெண்ட் கிருஷ்ணன் தலைமை வகித்தார் தோழர்கள் கிருஷ்ணன் பி. ஏ. பி. எல். ஈரோடு தோழர் கே. எஸ். நாச்சிமுத்து, என். கே. பழனிசாமி, எம். எல். ஏ. ஆகியவர்கள் கோரிக்கைகளை விளக்கியும் கேரள நிலைமையை விளக்கியும் பேசினார்கள் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

2 மாதத்திற்குள் பஞ்ச நிவாரண வேலைகள் மேற்படி பிர்க்காகளில் எடுக்கவில்லையானால் சர்க்காரை எதிர்த்து சத்தியாகிரம் செய்வதென்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மதுரை ஹார்வி தொழிலாளர்கள் நடத்தி வரும் போராட்டத்தை ஆதரித்தும் அதையொட்டியுள்ள லக்ஷக் கணக்கான மக்கள் பாதிக்கப்பட்டும், சர்க்கார் தலையிடாததைக் கண்டித்தும் உடனே சர்க்கார் இதில் தலையிட்டு சகஜ நிலை ஏற்படுத்த வேண்டுமென்று வற்புறுத்தி தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. மேலும் கேரள சர்க்கார் எடுத்து வரும் நடவடிக்கைகளை ஆதரித்தும் கேரளக் காங்கிரஸ் கட்சி கேரளாவில் பள்ளிக்கூடங்களின் முன்பும்,கலெக்டர் ஆபீசின்முன்பும் நடத்திவரும் தவறுதலான கிளர்ச்சியை கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. பெருந்துறை தோழர் சேட் பாஸ் வந்தனோபசாரம் கூறினர்.

## அரசியல் தியாகிகள் குழந்தைகளுக்கு கல்வி மானிய உதவி

### ஆந்திர சர்க்கார் முடிவு

ஹைதராபாத், ஜூன் 22—

அரசியல் தியாகிகளின் குழந்தைகளுக்குக் கல்வி மானியம் வழங்க ஆந்திர பிரதேச சர்க்கார் முடிவு செய்திருப்பதாக இன்று ஆந்திர முதல் அமைச்சர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அறிவித்தார்.

முதல் அமைச்சர் கூறியதாவது:—"தேசிய விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டு ஆறு மாதமோ கூடுதலோ சிறைபட்ட அரசியல் தியாகிகளின் குழந்தைகளுக்குக் கல்விச் சலுகை வழங்கப்படும், ஒருவர் உண்மையான அரசியல் தியாகியா அல்லவா என்பதை முடிவுகட்ட, சிறைவாசம் அநுபவித்தல் என்பது தவிர வேறு வழியில்லை. மாதம் 300 ரூபாய்க்குமேல் மொத்த வருமானமுள்ள அரசியல் தியாகிகளுக்கு இந்த வசதி கிடைக்காது.

இந்தச் சலுகை பிரகாரம், மாதமொன்றுக்குச் சம்பளக் கட்டண விஷயமாக எட்டு ரூபாயிலிருந்து 35 ரூபாய் வரையிலும் புத்தகங்கள் வாங்க வருஷம் பத்து ரூபாய் முதல் 50 ரூபாய் வரையிலும் பட்டுவாடா செய்யப்படும். (பிடிஐ)

## கேரள சர்க்காருக்கு மக்களின் பேராதரவு

## தீ வைத்தவர்கள் ஆசையில் மண்!

### கேரள மக்கள் தமது அரசாங்கத்தை பாதுகாக்க உறுதி பூண்டுள்ளனர்

(நமது விசேஷ நிருபர்)

திருவனந்தபுரம், ஜூன் 22—

கேரள அரசாங்கம் பெருவாரியான மக்களின் ஆதரவுடன் வகுப்புவாதிகள், காங்கிரஸ், பி சோ. ஆகியோரின் முறையற்ற சந்தர்ப்பவாத கூட்டு தொடங்கியிருக்கும் ஜனநாயக விரோத கிளர்ச்சியை வெற்றிகரமாகச் சமாளித்து வருவது தெரிந்ததே

கிளர்ச்சிக்காரர்களின் வெறித்தனம் காரணமாக அங்கமாலியில் ஜூன் 13-ல் போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய நேர்ந்தது. ஆனால் ஜூன் 14-ல் ராஜ்யத்தில் ஆளும் கட்சியான கம்யூனிஸ்ட் கட்சி நாடெங்கும் பொதுக் கூட்டங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடத்திற்று. மக்களின் பேராதரவு இல்லாத வேறெந்த ஆளும் கட்சி இதைச் செய்ய முடியும்?

அவை சாதாரணக் கூட்டங்கள் அல்ல. கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் இயக்கத்தை அவை அளவிட்டுக் காட்டுவனவாகும். ஜூன் 10-ல் ராஜ்ய சட்டசபையில் விவசாய உறவு மசோதா நிறைவேறியது. பல்லாயிரக் கணக்கான விவசாய மக்களுக்கு வரப்பிரசாதமான இம்மசோதாவை நிறைவேற்றிய அரசாங்கத்தை வாழ்த்தி ஜூன் 14-ல் ராஜ்யமெங்கும் பொதுக்கூட்டங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடத்துமாறு கம்யூனிஸ்ட் கட்சி வேண்டுகோள் விடுத்தது.

### மக்கள் யார் பக்கம்?

கேரளத்தின் ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரை, பரசாலையிலிருந்து காசர் கோடுவரை மக்கள் கம்யூனிஸ்ட் கட்சியின் கீழ் அன்று அணி திரண்டனர்.

கண்ணனூரில்: இரண்டு மைல் நீள ஊர்வலம் நடைபெற்றது. வயதான விவசாயிகள் தலைமையில் மக்கள் 10 அல்லது 12 மைல்கள் வரை மகிழ்ச்சியுடன் நடந்தனர்.

"விவசாய மசோதாவை நிறைவேற்றிய அரசாங்கத்தை நாங்கள் பாதுகாப்போம்" என்ற அவர்களின் முழக்கம் இன்னும் எதிரொலி செய்கிறது. இந்த அரசாங்கத்தின் எதிர்காலத்துக்கு உத்திரவாதம் அளிப்பவர்கள் அவர்கள் தான் என்பது உறுதியாயிற்று.

### கோழிக்கோடு

பத்தாயிரம் மக்கள் திரண்ட ஊர்வலம் நடைபெற்றது. இது "மீட்புநாள்" ஊர்வலத்தில் கலந்துகொண்டவர்களைவிட இரண்டரை மடங்கு அதிகமான தாகும். இந்த ஊர்வலத்தை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த இரு சீக்கியர்கள்கூட அரசாங்க ஆதரவு கோஷங்கள் முழங்கியதை மக்கள் வியப்புடன் பார்த்தனர்.

### பாலக்காடு

10,000 பேர் கொண்ட ஊர்வலமும் 30,000 பேர் திரண்ட பொதுக்கூட்டமும் நடைபெற்றன. "மீட்பு" நாளில் எதிர்க்கட்சிகள் வெறும் 300 பேரைக் கூடத் திரட்ட முடியவில்லை; 2,500 பேர்தான் அவர்கள் கூட்டத்துக்கு வந்தனர் 3,000 பேர் ஊர்வலத்தையும் 10,000 பேர் கொண்ட அணிவகுப்பையும்தான் கம்யூனிஸ்ட் கட்சியே எதிர்பார்த்தது என்றால் அரசாங்கத்துக்கு மக்கள் அளித்த ஆதரவை என்னவென்பது?

கொல்லத்தில்: ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சிக் காரியதரிசி தோழர் எம். என். கோவிந்தன் நாயர் பேசிய கூட்டம் நகரம் இதுவரை காணாத அளவு பெரியது. மன்னத்துப் பத்மநாபனின் கோட்டை என்று கூறப்படும். செங்கனாசேரியில், கம்யூனிஸ்ட் கட்சி நடத்திய அணிவகுப்பு மன்னமே காணாத அளவினதாக இருந்தது.

### திருவனந்தபுரம்

திருவனந்தபுரத்துக்கு அருகில் ஜூன் 15ல் இரண்டு துப்பாக்கிப் பிரயோகங்கள் நடைபெற்றன. ஆனால் மறுநாளே திருவனந்தபுரம் நகரில் ராஜ்ய முதலமைச்சர் தோழர் இ.எம்.எஸ். பிரம்மாண்டமான தொரு பொதுக்கூட்டத்தில் பேசினார் என்றால் இதிலிருந்து தெரிவது என்ன?

மக்களின் மனநிலையைப் புரிந்துகொள்ள இவையெல்லாம் உதவும் அரசாங்கத்துக்கெதிராக மக்கள் அணிதிரண்டு வரவில்லை; தீ வைத்தவர்கள் எதிர்பார்த்தபடி மக்கள் ஆத்திரமடையவில்லை. ஆனால், மக்கள் தமது அரசாங்கத்துக்காதரவாக ஒன்றுதிரண்டு வந்தனர்.

## கேரளக் கிளர்ச்சி பச்சை சந்தர்ப்பவாதம்!

### உ. பி. தலைவர் கண்டனம்

லக்ஷ்மணபுரி, ஜூன் 22—

உத்தரப் பிரதேச சட்டசபையில் முற்போக்கு கட்சியின் தலைவரும் முன்னாள் மந்திரியுமான எஸ். கிருஷ்ண தத்த பாலிவால் கேரளத்தில் எதிர்க் கட்சிகள் தொடுத்துள்ள போராட்டம் பச்சை சந்தர்ப்பவாதம் என்று கண்டித்தார்.

காங்கிரசுடன் கடந்த 30 வருடங்களாகத் தொடர்புகொண்டிருந்ததுபற்றி விளக்கிய அவர் பிரதமர் நேரு எதிர்க்கட்சிகளின் ஐக்கிய முன்னணியை சந்தர்ப்பவாதம் என்று விமர்சித்ததைச் சுட்டிக்காட்டினார்.

இப்போதோ காங்கிரஸ், பி. சோ.வுடன் மட்டுமின்றி வகுப்புவாத முஸ்லீம் லீக், ஜாதிவாத நாயர் சர்வீஸ் சொசைடி, மதவாத கத்தோலிக்க சர்ச் இவற்றுடன் சேர்ந்து நிற்பதை நேரு நியாயப் படுத்துகிறார் போலும் என்றார்.

அரசியல் சட்டப் பிரகாரம் ஸ்தாபிக்கப்பட்ட எந்த சர்க்காரையும் எதிர்த்து நேரடிப் போராட்டம் நடத்தக் கூடாது என்று கிளிப்பிள்ளை போலத் திருப்பித் திருப்பி பிரதமர் நேருவும், உள்விவகார மந்திரி பந்தும், கூறியுள்ளதைப் பாலிவால் நினைவுறுத்தினார்.

கேரளத்தில் நடக்கும் இந்தக் கிளர்ச்சி காங்கிரஸின் சமய சந்தர்ப்ப வாதத்தை அம்பலப் படுத்திவிட்டது என்றார்.

(ஐ. பி. ஏ.)

## தேனி தொழிலாளர் துடித்தெழுந்தனர்

தேனி, ஜூன் 23—

கே. டி. கே. தங்கமணி, பாலசுப்ரமண்யம் உண்ணாவிரதம் இருக்கிறார்கள் என்பதைக் கேட்டதுமே தேனி நகர மக்களும் சகல பகுதி தொழிலாளர்களும் பெருங் கவலையும் பரபரப்பும் அடைந்தார்கள்.

ஹார்வி மில் கதவடைப்பை நீக்கி 22,000 தொழிலாளர்களுக்கும் பழைய வேலையே கொடுக்க வேண்டுமென்றும், சர்க்கார் இதில் உடனே தலையிடவேண்டுமென்றும் தேனி பொதுத்தொழிலாளர் சங்கம் தந்தி கொடுத்திருக்கிறது.

## கேரள சர்க்காருக்கு ஆதரவு

### சதி செய்பவர்கள் முறியடிக்கப்படுவர்

ஜோலார்பேட்டை, ஜூன் 22—

கேரள சர்க்காரை ஆதரித்து கம்யூனிஸ்ட் கட்சியின் ஜோலார்பேட்டைக் கமிட்டி சார்பில் தோழர் கே. எல். நடேசன் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஜனசக்தி உதவி ஆசிரியர் ஐ. மாயாண்டி பாரதி, திருப்பத்தூர் டாக்டர் கிருஷ்ணசாமி, குடியாத்தம் வி. முனுசாமி ஆகியோர் பேசிய பின் கேரள சர்க்காரைக் கவிழ்க்க முயற்சிக்கும் சதிகாரர்களைக் கண்டித்தும் அவர்களை ஒடுக்க கேரள சர்க்கார் எடுக்கும் சகல நடவடிக்கைகளையும் ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. மற்றும், ஹார்வி, எக்ஸ்பிரஸ், வண்டலூர், பீடி, பஞ்சாயத்து தொழிலாளர் பற்றிய தீர்மானங்களும் நிறைவேறின.

குடியாத்தம் நாகையா கலைக் குழுவினர்கள் டேப் இன்னிசைக்

### தென் ஆப்ரிக்காவில்

## ஆப்ரிக்கரின் பகிஷ்கார இயக்கம்

### ஒரு வெள்ளையர் கம்பெனி பணிந்தது

கேப்டவுன், ஜூன் 21—

தென் ஆப்ரிக்காவில் நிறவெறி பிடித்த வெள்ளையரின் கம்பெனிகளைப் பகிஷ்காரம் செய்யும் இயக்கத்தை ஆப்ரிக்க தேசிய காங்கிரஸ் ஜூன் 24ந் தேதி ஆரம்பிக்கப் போகிறது.

பகிஷ்கார இயக்கம் ஆரம்பமாவதற்கு ஐந்து நாட்களுக்கு முன்னதாகவே, பழங்கள், காய்கறிகளைப் பதனம் செய்யும் தொழில் நடத்தும் பெரிய கம்பெனி பணிந்துவிட்டது. கடந்த பொதுத்தேர்தலின் போது வேலையிலிருந்து நீக்கப்பட்ட 24 வெள்ளையரல்லாதாரை மீண்டும் வேலையில் அமர்த்தவும், வெள்ளையரல்லாதார் தொழிற்சங்கத்தை அங்கீகரிக்கவும் தொழிற்சாலைக்குள்ளும் வேலை நேரத்தின் போதும் தொழிற்சங்கக் கட்டணத்தை வசூலிக்க அநுமதிக்கவும் அக்கம்பெனி சம்மதித்துள்ளது.

இன ஒதுக்கல் கொள்கையை அமுல் நடத்தும் தென் ஆப்ரிக்க சர்க்காரை ஆதரிப்பவர்களின் வர்த்தக ஸ்தலங்களை எதிர்த்தே பகிஷ்கார இயக்கத்தை ஆப்ரிக்க தேசிய காங்கிரஸ் நடத்துகிறது. நிறவெறி பிடித்த சர்க்காரை வயிற்றில் அடிக்க இது மறைமுகமான வழிஎன்றும் காங்கிரஸ் பிரதிநிதி கூறினார்.

### உருளைக் கிழங்கு பகிஷ்காரம்

பண்ணைகளில் வெள்ளையரல்லாதாரின் வேலை நிலைமை மிகவும் அதிருப்திகரமாக விருப்பதை ஆட்சேபித்து நாட்டின் பல பகுதிகளில் உருளைக் கிழங்கு பகிஷ்காரம் ஆரம்பமாகி யுள்ளது.

(ராய்ட்டர்

## கேரள சர்க்காரை ஆதரித்து கோலார் தொழிலாளர்கள் அணிவகுப்பு!

கே ஜி.எப். சாம்பியன் கட்சிக் கிளையின் பொதுக்கூட்டம் 12-6-59 மாலை 7 மணியளவில் தோழர் எம். எஸ். ஜேசுதாஸ் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் பி. தவமணி, எஸ். சவரிதாஸ் கேரள சர்க்காரின் சாதனைகளை விளக்கியும், கல்விச் சட்டத்தின் பலாபலன்களை விவரித்து, அதற்கெதிராக கத்தோலிக்க மதத் தலைவர்கள், நாயர் தலைவர்கள் சிலர், காங்கிரஸ் இதர பிற்போக்காளர் நடத்தி வரும் கலவரங்களைக் கண்டித்தும் பேசினர். கலவரங்களைக் கண்டித்தும், சட்டவிரோதமான வழிகள் மூலம் கேரள சர்க்காரை அகற்றுவதற்கு செய்யப்படும் முயற்சிகளை அடக்குவதில் வெற்றி காண்பது இந்தியாவில் ஜனநாயகம் தழைத்தோங்க வழி செய்யும் என்ற தீர்மானம்

## மாப்பிள்ளை ஊரணி பஞ்சாயத்து

### கம்யூனிஸ்ட் வெற்றி

தூத்துக்குடி, ஜூன் 22—

தூத்துக்குடியை அடுத்துள்ள மாப்பிள்ளை ஊரணி பஞ்சாயத்து தேர்தலில் 2-வது வார்டில் கம்யூனிஸ்ட் அனுதாபி தோழர் சிலுவைமுத்து (ராஜபாளையம்), அந்தோணிமுத்து (சவேரியார் புரம்), இருவரும் அதிக ஓட்டுகள் பெற்று வெற்றி பெற்றனர்.

3-வது வார்டில் கம்யூனிஸ்ட் உறுப்பினர்களான தோழர் மிக்கேல் ஜெபமாலை, (சிலுவைப் பட்டி) சத்திவேல் (டேவிஸ்புரம்) இருவரும் அதிக ஓட்டுகள் பெற்று வெற்றி பெற்றனர்.

## கோவை "ஆனந்த பவன்" முதலாளியுடன் சமரச முயற்சி

கோவை, ஜூன் 22—

பாம்பே ஆனந்த பவன் போராட்டத்தை ஒட்டி கோவை ஜில்லா ஹோட்டல் தொழிலாளர் சங்கத்தின் அவசர செயல் கமிட்டி கூட்டம். சங்க காரியாலயத்தில் நடைபெற்றது.

19-6-59-ந் தேதி காலை 7 மணிக்கு முனிசிபல் கவுன்சிலர் ஜனாப் என். எஸ். பாபா அவர்கள் தலைமையில் பல தொழிற் சங்கப் பிரதிநிதிகளும், சர்வ கட்சிப் பிரதிநிதிகளும் இக்கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

அதுசமயம் கோவை நகரத்திலுள்ள பாம்பே ஆனந்த பவன் தொழிலாளர்களின் சார்பில் சங்கத் தலைவர் திரு. எஸ். நாராயணன் அவர்கள் சங்கம் இதற்கு முன்னால் எடுத்துக் கொண்ட சமரசத்திற்கான முயற்சிகளையும், மற்ற நடவடிக்கைகளையும் பிரதிநிதிகளுக்கு விரிவாக எடுத்துச் சொன்னார். தொழிலாளர்களின் குறைகளை அனுதாபத்துடன் கவனித்த பிறகு தற்போது தொழிலாளர்களுக்கு ஏற்பட்டிருக்கிற நெருக்கடியான நிலைமையைப் பற்றியும் பிரதிநிதிகள் நீண்ட நேரம் விவாதித்து நிர்வாகத்தினரை நேரில் கண்டு இது சம்பந்தமாக விவாதிக்க ஒரு தூதுகோஷ்டியைத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

தூதுகோஷ்டியார் மானேஜ்மெண்டாரை 24-6-59ந் தேதிக்கு முன் கண்டு ஒரு சமரச முடிவு ஏற்படுத்த சாத்தியம் உண்டா என்பதை அறியுமாறு கூட்டம் கேட்டுக் கொண்டது.

தேர்ந்தெடுக்கப்பட்ட தூது கோஷ்டி அங்கத்தினர்களாவன:

திருவாளர்கள் யோ. சாமுவேல் நகர காங்கிரஸ் கமிட்டி, பி. கே. ராமசாமி ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி, ஆர். சண்முகம் பிள்ளை செஞ்சிலுவைச் சங்கம், க. கோபால் திராவிட முன்னேற்றக்கழகம். நாகராஜ்ராவ் பாங்கு சிப்பந்திகள் சங்கம், ஜனாப் என். எஸ். பாபா எம். சி., அவசர செயல்கமிட்டி தலைவர்.

காந்தி சௌக் மைதானத்தில் 24-6-59-ந் தேதி ஒரு சர்வகட்சி பொதுக்கூட்டம் கூட்டுவதென்றும் இக்கூட்டம் முடிவு செய்தது.

## அஸாமில் கடுமழை பயங்கர வெள்ளம்

துப்ரி (அஸாம்), ஜூன் 23—

சோனுபரி நதியில் மழையும் சூறைக்காற்றும் பலமாகஅடித்ததால் கடந்த சனிக்கிழமையன்று ஒரு படகில் பிரயாணம் செய்து கொண்டிருந்த 13 பேர் படகு கவிழ்ந்து மாண்டனர். கரைகள் உடைந்து வயல்களெல்லாம் நாசமாகிவிட்டன. ஊர்முழுவதும் நீர் நிரம்பிக் கிடக்கிறது. 20,000 மக்கள் வீடிழந்து தவிக்கிறார்கள். கால நிலை சரியில்லாததால் விமானம் மூலம் உணவு சப்ளை செய்வதுகூட முடியாத நிலைமை ஏற்பட்டிருப்பதாக சியாங் டிவிஷன் அதிகாரிகள் சொல்லுகிறார்கள். நிலைமை பயங்கரமாகவும் பரிதாபகரமாகவும் இருக்கிறது.

## உண்ணாவிரதம் வெல்க!

தூத்துக்குடி, ஜூன் 22—

தூத்துக்குடி டேவிஸ்புரம் ரோட்டில் மில் தொழிலாளர் சங்கப் போராட்டக் கமிட்டிக் கூட்டம் பி. சண்முகம் (நகரசபை உறுப்பினர்) தலைமையில் நடைபெற்றது.

தோழர் ஞா. சுடலைமுத்து (போராட்டக் கமிட்டிச் செயலாளர்) இதுவரை நடந்துள்ள விஷயங்கள் பற்றியும், தோழர்கள் கே. டி. கே. தங்கமணி, பாலசுப்பிரமணியம் இருவரும் உண்ணாவிரதம் இருப்பது பற்றியும் பேசினர்.

ந. நி

## மறியலுக்கு கூலி ஆள் பிடிக்க தூத்துக்குடிக்கு வந்தார்கள்!

### கேரள காங்கிரஸின் லட்சணம்!

தூத்துக்குடி, ஜூன் 22—

சுப்ரீம் கோர்ட்டின் திருத்தம், ஜனாதிபதியின் அங்கீகாரம் ஆகியவற்றைப் பெற்று, சட்டசபையில் நிறைவேற்றப் பட்ட கல்விச் சட்டத்தை, கத்தோலிக்கப் பாதிரியார்களும் மன்னத்து பத்மனாபனின் நாயர் சங்கத்தினரும் எதிர்க்கிறார்கள் அல்லவா! அதற்காக பள்ளிக்கூட மூடு விழாக்கள் நடத்தியும், திறந்திருக்கும் சர்க்கார் பள்ளிகளையும் இதர பள்ளிகளையும் மறியல் செய்து கலாட்டா செய்கிறார்கள் அல்லவா!

இதுவகுப்புவாதிகள் போராட்டம், இதற்கும் காங்கிரஸுக்கும் சம்பந்த மில்லையென்றும் காங்கிரஸ் நடத்தும் போராட்டம் அரசியல் போராட்டமென்றும் காங்கிரஸ் தலைவர் இந்திராகாந்தி சொல்லுகிறார் அல்லவா!

ஆனால், தூத்துக்குடியிலிருந்து கிடைத்த தகவலோ, விஷயம் நேர்மாறாக இருக்கிறதென்பதை அம்பலப் படுத்துகிறது.

### முதலாளியிடம் கூலிக்கு ஆள்பிடிக்க

கேரளாவிலிருந்து இரண்டு காங்கிரஸ்காரர்கள் நெல்லை காங்கிரஸ் பிரமுகர் ஒருவரின் துணையுடன் இரண்டு தினங்களுக்கு முன் இங்கு வந்து தூத்துக்குடி கத்தோலிக்க முதலாளிகள் பலரைக் கண்டு சென்றனராம்.

இவர்கள் தங்களுடன் கேரள துப்பாக்கிப் பிரயோகம் பற்றிய படங்கள்,எதிர்க்கட்சியினர் மறியல் செய்யும் படங்கள் முதலியவைகளை அச்சடித்த பிரசுரத்தை ஏராளமாக கொண்டுவந்து விநியோகித் திருக்கிறார்கள். இந்த பிரசுரம் புனலூர் காங்கிரஸ் கமிட்டியால் அச்சிடப்பட்டுள்ளது.கேரளத்திலிருந்துவந்தஇவர்கள் தூத்துக்குடியில் பெரும் நிதி வசூல் செய்ய முயன்றதாகவும் ஆனால் அது வெற்றியளிக்கவில்லை யென்றும் தெரிகிறது. கேரளத்தில் மறியல் செய்ய கத்தோலிக்க தொண்டர்களை அனுப்புமாறும் இங்கு பலரிடம் கேட்டுக் கொண்டார்களாம்.

இந்த நபர்களிடம் தூத்துக்குடி கத்தோலிக்க பிரமுகர் ஒருவர் "இங்கு நாங்களும் மற்ற மதத்தினரும் சகோதரர்களாக வாழுகிறோம். இந்த உறவை கெடுத்துவிட நீங்கள் முயல வேண்டாம்" என்று கூறினாராம்.

### கோசல்ராம் ஆள்

கேரளாவிலிருந்து இங்கு வந்துள்ள இரண்டு கத்தோலிக்க காங்கிரஸ்காரர்களில் ஒருவரான ஜோசப் என்பவர் 21—6—59ல் தூத்துக்குடி கத்தோலிக்கர்கள் கூட்டம் ஒன்றை கூட்டினாராம். இதில் குறிப்பிட்ட சில கத்தோலிக்க பிரமுகர்களே கலந்து கொண்டார்களாம், எதிர்பார்த்தபடி ஏராளமான கத்தோலிக்க பொது மக்கள் கலந்து கொள்ளவில்லையாம். இவர் கேரள அரசாங்கத்தைப் பற்றி வசைமாரி பொழிந்ததைக் கண்டு சில கத்தோலிக்க பிரமுகர்கள் (ஒரு அட்வகேட், ஒரு தோணி முதலாளி உட்பட) இங்கு அரசியல் பேசவேண்டாம்..திருவனந்தபுரம் பிஷப்கூட கேரள அரசாங்கத்தை கவிழ்ப்பது கத்தோலிக்கர்கள் நோக்கமல்ல என்று கூறியிருக்கிறாரே, கல்வி மசோதாவில் கெடுதல் இருந்தால் அதை மட்டும் பேசவேண்டும் என்று எதிர்த்துக் கூறவே கூட்டம் குழப்பத்தில் முடிந்ததாம். ஒரு பிரமுகர் கேரளபிஷப் அனுமதிக் கடிதம் கொண்டு வந்திருக்கிறீர்களா என்று கேட்டதற்கு ஜோசப் "இல்லை" என்று கூறி நெல்லை காங்கிரஸ் பிரமுகர் திரு. கோசல்ராம்தான் இங்கு அனுப்

## தூத்துக்குடி மில் தொழிலாளர்களுக்கு ஆதரவாக சத்தியாக்கிரகம் செய்ய முடிவு

தூத்துக்குடி, ஜூன் 22—

தூத்துக்குடி மில் தொழிலாளர் சங்கத்தில் 21-6-59ல் கம்யூனிஸ்ட் கட்சி, தி.மு.க., பி.சோ. பு. சோ. ஜனநாயக காங்கிரஸ், தமிழரசுக் கழகம் ஆகிய கட்சிகளின் பிரதிநிதிகள் அடங்கிய கூட்டம் நடைபெற்றது.

மில் தொழிலாளர் சங்க பொதுச் செயலாளர் தோழர் ஞா. சுடலைமுத்து தலைமை வகித்தார்.

தோழர்கள் கிருஷ்ணன் (தி. மு.க.), பி. ஐசக் (கம்யூனிஸ்ட்) முதலியவர்கள் மில் கதவடைப்பு பற்றி பேசினர்கள், முடிவில் விரைவில் மில் தொழிலாளருக்கு ஆதரவாகவும், மில்லைத் [illegible] வேண்டும் என்று கோரியும் சத்தியாக்கிரகம் செய்வதென்று ஏகமனதாக முடிவு செய்யப்பட்டது.

ஏற்கனவே மில் தொழிலாளர் போராட்டக் கமிட்டியும் சத்தியாக்கிரகம் செய்ய முடிவு செய்துள்ளது குறிப்பிடத்தக்கது.

### செம்பு உற்பத்தி

புதுடில்லி, ஜூன் 22—

இந்தியாவில் 1959 மார்ச் மாதத்துடன் முடிவடைந்த மூன்று மாதங்களில், 96,962 மீட்டரிக் டன் செம்பு உற்பத்தியாகியுள்ளது. இந்தச் செம்பு முழுதும் பீஹாரிலுள்ள சிங்கபூமி ஜில்லாவிலுள்ள சுரங்கங்க

## நிறவெறியை எதிர்த்து கப்பல் தொழிலாளர் கிளர்ச்சி

### உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தனர்

லிவர்பூர், ஜூன் 22—

இங்கு துறைமுகத்தில் தங்கியுள்ள அபாலா என்ற கப்பலில் வேலை செய்யும் 75 நைஜீரியத் தொழிலாளர்கள் நிறவெறியால் பாரபட்சம் காட்டப்படுவதை ஆட்சேபித்து உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள்.

கப்பலில் ஸ்டிவர்ட், உதவி ஸ்டிவர்ட்களாக இருக்கும் ஐரோப்பிய அதிகாரிகள் பாரபட்சம் காட்டுவதால் அவர்கள் அகற்றப்பட வேண்டும் என்று இத் தொழிலாளிகள் கேட்டிருக்கிறார்கள். உணவு உட்பட எல்லா விஷயங்களிலும் பாரபட்சம் காட்டப்படுவதாக அவர்கள் குற்றம் சாட்டியுள்ளனர்.

கம்பெனி அதிகாரிகள் இன வேற்றுமைகள் கூடாது என்றும் சுமுக உறவு வேண்டும் எனவும் கூறியிருப்பதாகத் தெரிகிறது.

## இராக்கில் கம்யூனிஸ்ட் சதி என்பது வெறும் சரடு!

### எகிப்திய பத்திரிகை விஷமம்!

பாக்தாத் ஜூன் 22—

இராக்கில் காஸிம் சர்க்காரைக் கவிழ்க்க கம்யூனிஸ்ட் சதி ஒன்று நடந்ததாயும், இது ஒடுக்கப் பட்டதாயும் 'அல்அக்பார்' என்னும் எகிப்தியர் பத்திரிகைவெளியிட்ட செய்தி வெறும் சரடு என்று அதிகார பூர்வமாக மறுக்கப் பட்டிருக்கிறது.

பாதுகாப்பு மந்திரி இலாகா

சிறு மோதல் நடத்தியதை இவ்வாறு எகிப்தியப் பத்திரிகைகள் சதி என்று வர்ணித்துள்ளன.

கெய்ரோ பத்திரிகைகள் துரும்பைத் தூணாகக் காட்டி இராக் மக்கள் பகுதிகளிடையே பூசல்களை விதைக்க முயற்சி செய்கிறார்கள் என்று இராக் அதிகாரி

# கேரள நிர்வாகத்தை ஜனாதிபதி ஏற்கவேண்டுமாம்

## கலகக்காரர்களின் வெறியாட்டம் ஓயவில்லை

### மத்திய சர்க்காருக்குத் தாக்கீது

திருவனந்தபுரம், ஜூன் 22—

கேரளம் ஒரு ஜனநாயக ராஜ்யமாக உயிர் வாழ வேண்டுமானால், கம்யூனிஸ்டுகள் கையில் கேரள மக்கள் ஒப்படைக்கப்படாமலிருக்க வேண்டுமானால் மத்திய சர்க்கார் தாமதியாமல் உடனடியாகத் தலையிட்டுச் செயல்பட வேண்டும் என்று கேரளப் போராட்டக் குழுவின் செயல் கமிட்டி ஓர் தாக்கீது விடுத்துள்ளது.

கம்யூனிஸ்ட் ஆட்சியைக் கவிழ்க்கத் தாம் துவங்கியுள்ள இந்தப் போராட்டம் ஜனநாயக சம்பிரதாயங்கள் அனைத்துக்கும் விரோதமானது. இந்திய அரசியல் சட்டத்திற்கு விரோதமானது என்று பல்வேறு பக்கங்களிலிருந்தும் கண்டனம் எழுந்துள்ளதைப் பற்றிக் கலவரமடைந்துள்ள இக்குழு இதைப் பலமாக மறுத்துள்ளது.

ராஜ்ய சர்க்கார் மத்திய சர்க்காருக்கு கீழிருப்பது, விசுவாசம் தெரிவிப்பது என்ற முறையில் மத்திய சர்க்கார் தலையிட்டு நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ள அதிகாரம் உண்டு என்று இக்குழுவின் அறிக்கை சுட்டிக் காட்டுகிறது. இவ்வாறு ஜனாதிபதி ஒரு ராஜ்ய நிர்வாகத்தை எடுத்துக்கொள்ள முடியும் என்ற அரசியல் சட்ட ஷரத்தையும் இவ்வறிக்கை கோடிட்டுக்காட்டுகிறது.

இந்தக் கிளர்ச்சி கத்தோலிக்கர் கட்டுப்பாட்டில் நடக்கிறது என்பதை இக்குழுவின் அறிக்கை மறுத்துள்ளது.

## இந்திய மொழி பத்திரிகை சங்கம்

### புதிய நிர்வாகிகள்

பம்பாய், ஜூன் 22—

அகில இந்திய மொழிப் பத்திரிகைகள் சங்கத்தில் 1959-60க்குரிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஏ. ஆர். பட் எம் எல் சி. (சம்பாதா—பூனா) தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தமிழ்நாடு டி. எம். செட்டியார் உபதலைவருள் ஒருவராயும் 'கலைமகள்' ராமரத்தினம் நிர்வாகக் குழு உறுப்பினராயும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

## திருச்சூரில் ஆயுத லைசென்சுகள் ரத்து

திருச்சூர், ஜூன் 22—

ஜில்லா கலெக்டர் துப்பாக்கி முதலிய ஆயுதங்கள் வைத்திருக்கும் லைசென்சுகளை ரத்துசெய்துவிட்டார். ஆயுதங்களை உடனே அருகாமையிலுள்ள போலீஸ் ஸ்டேஷனில் ஒப்புவித்துவிடுமாறும் உத்தரவு பிறப்பித்திருக்கிறார். —பி.டி.ஐ.

## 15000 பேர் வேலை நிறுத்தம்

கல்கத்தா, ஜூன் 21—

மேற்கு வங்க ராஜ்ய முழுவதிலுமுள்ள 66 நகரங்களின் கீழ் வேலை செய்துவரும் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் குதித்துள்ளனர். குறைந்த பட்ச சம்பளக் கமிட்டியின் சிபாரிசுகள் அமுல் செய்யப்படவில்லை என்பதே இந்த நடவடிக்கைக்குக் காரணம். போராட்டத்தில் 15 ஆயிரம்பேருக்குமேல் ஈடுபட்டுள்ளனர்.

## பவானிசாகரில் குஞ்சுராமன், புருஷோத்தமன் உண்ணாவிரதம்

பவானிசாகர், ஜூன் 22—

பவானிசாகர் மராமத்து இலாகா தொழிற்சாலை இங்கிருந்து பரம்பிக்குள திட்டத்தை நிறுவுவதற்காக இயந்திரங்களும் தொழிற்சாலை கட்டிட சாமான்களும் பரம்பிக்குள திட்டத்திற்கு கொண்டு செல்கின்றனர். தொழிற்சாலை நிர்வாகிகள் எல்லா தொழிலாளர்களையும் 19—6—59ல் வேலையை விட்டு நீக்கிவிட்டார்கள். தொழிற்சாலையுடன், தொழிலாளர்களையும் பரம்பிக்குள திட்டத்திற்கு மாற்றும்படி தொழிற்சங்கம் தொழிற்சாலை சம்பந்தப்பட்ட அமைச்சர்களையும், அதிகாரிகளையும் பேட்டிக் கண்டும், மகஜர்கள் பல கொடுத்தும் சாதகமான பதில் கிட்டவில்லை. இதைக் குறித்து தொழிலாளர்கள் 20-6-59 காலை 9 மணி முதல் உண்ணாவிரத போராட்டம் நடத்தி வருகிறார்கள். 21-6-59ல் நம்பியூர் தொகுதி எம். எல். ஏ. கே. எல் ராமசாமி அவர்கள் இங்கு வந்து நேரில் பார்த்துப் போனார். தொழிற்சாலையை பிரித்துக் கொண்டிருந்த காண்ட்ராக்ட் வேலை ஆட்கள்கூட வேலை செய்யவில்லை. புதிய தொழிலாளர்களை வேலைக்கு எடுக்க நிர்வாகிகள் செய்த முயற்சி பயன் அளிக்கவில்லை.

21—6—59 தேதியில் நூற்றுக்கணக்கான கிராம சேவகர்கள், என். ஜி. ஓக்கள், விவசாயிகள் மற்றுமுள்ள பெரியோர்களும் வந்து நேரில் பார்த்து தங்களின் ஆதரவைத் தெரிவித்துப் போனார்கள், புங்கார் கிராம விவசாய சங்கத்தின் சார்பாக உண்ணாவிரதம் இருக்கும் தோழர்கள் பி. புருசோத்தமனுக்கும், குஞ்சுராமனுக்கும் மலர் மாலைப் போட்டு தங்கள் ஆதரவைத் தெரிவித்துப் போனார்கள்.

தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளிகள் ஒற்றுமையுடன் உண்ணாவிரத போராட்டத்தை நடத்தி வருகிறார்கள்.





## கேரள அரசாங்கத்துக்கெதிராக குண்டர்கள் வெறியாட்டம்

### காங்கிரஸ் போக்குக்கு ஈ. வெ. ரா. கடும் கண்டனம்

திருச்சி, ஜூன் 22—

கேரளத்தில் காங்கிரஸ் கட்சி மேற்கொண்டிருக்கும் செயல்கள், சட்டபூர்வமாக அமைக்கப்பட்டதொரு அரசாங்கத்திடமிருந்து அதிகாரத்தை அபகரிக்கும் நோக்கத்துடனிருக்கின்றன என சனிக்கிழமையன்று இங்கு நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் ஈ வெ ரா. கூறினார்.

கேரளப் பிரச்சினையில் தாம் ராஜாஜியின் கருத்தை ஆதரிப்பதாகவும், தேர்தல்களில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை அரசாங்கத்திலிருந்து அப்புறப்படுத்த சில குண்டர்கள் முயல்வதைத் தாம் கடுமையாக எதிர்ப்பதாகவும் அவர் கூறினார்

கேரளக் கல்விச் சட்டத்தை ஈ வெ.ரா. ஆதரித்தார். "பெரும் லாபங்களைக் குவிக்க" மிஷனரிகள் கல்வியை ஒருவியாபாரமாக ஆக்கிவிட்டனர் எனவும் நிதிகளில் பெரும் அளவை அவர்கள் தங்களுடையதாக்கிக் கொண்டனர் எனவும் அவர் கூறினார்.

## ஹார்வி மில் போராட்டத்திற்கு ஆதரவு

மேலூர், ஜூன், 19—

19-6-59-ந் தேதி மேலூர் தாலுக்கா கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் மேலூர் மந்தைத் திடலில் தாலுக்கா கமிட்டி உறுப்பினர் தோழர் க. இராமலிங்கம் அவர்கள் தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அப்பொதுக் கூட்டத்தில் தேசியக் கவுன்சில் உறுப்பினர் தோழர் எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ அவர்கள், இன்றைய கேரளத்தின் நிலைபற்றியும், ஹார்வி மில் தொழிலாளர்கள் போராட்டம் பற்றியும், தலைவர்கள் கே. டி. கே. தங்கமணி எம். பி., தோழர் ஏ. பாலசுப்பிரமணியம் இவர்கள் ஆரம்பித்திருக்கும் உண்ணாவிரதம் பற்றியும், நீண்டநேரம் சொற்பொழிவாற்றினார். கூட்டத்தில் 3000 பொது மக்கள் கலந்து கொண்டனர். கேரளத்தில் பிற்போக்கு சக்திகளின் போராட்டத்தை முறியடிப்பதில் கேரள சர்க்கார் பூரண வெற்றியடையும் என்றும். ஹார்வி மில் லைத்திறந்து தொழிலாளர்களுக்கு வேலை செய்வதற்கு சர்க்கார் முன் முயற்சியை உடனே எடுக்க வேண்டுமென்றும், இல்லையானால் ஏற்படும் நஷ்டங்களுக்கு சர்க்காரே பொறுப்பேற்க வேண்டுமென்றும், தலைவர்கள் உண்ணாவிரத மிருப்பதற்கு வாழ்த்துகள் தெரிவித்தும், அவர்கள் உண்ணாவிரதம் வெற்றியடைய சபதமேற்க வேண்டுமென்றும் பொதுக் கூட்டங்கள் நடத்துவதற்குமேடை அமைத்து வசதி செய்து தரும்படி மேலூர் பஞ்சாயத்துப் போர்டாரை கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. கட்சி நிதியாக ரூ 80 கிளைகளின் சார்பிலும் விவசாய சங்கங்களின் சார்பிலும் கொடுக்கப்பட்டது.

## பொன்னான வாய்ப்பு நழுவிவிடுமாம்!

### முன்னாள் மந்திரி ஓலம்!

எர்ணாகுளம், ஜூன் 23—

கேரளத்தில் கம்யூனிஸ்ட் சர்க்காருக்கெதிராக இன்று நடைபெற்றுவரும் கிளர்ச்சியிலிருந்து கேரளப் பிரதேசக் காங்கிரஸ் நழுவி, வெளியேறிவிடுமேயானால் அது ஒரு துக்கரமான சம்பவமாய்விடுமாம். காங்கிரஸ் கேரளத்தில் இழந்த தன் செல்வாக்கையும் மதிப்பையும் மீண்டும் பெறுவதற்கு இது ஒரு பொன்னான வாய்ப்பென்றும், ஆகவே போராட்டத்தை நிறுத்தினால் அந்த வாய்ப்பு நழுவிவிடுமென்றும் திருவாங்கூர்-கொச்சியின் முன்னாள் அமைச்சர் எல். எம். பைலி ஓலமிட்டுள்ளார்.

## மின்சார போர்டு ஊழியர் கூட்டம்

கோவை, ஜூன் 18—

சென்னை மின்சார போர்டு ஊழியர் சங்க, கோவை கிளையின் வருடாந்திர கூட்டம் 5-7-59 அன்று ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கு கருவாயூர் லாட்ஜில் நடைபெறும்.

## 35 லக்ஷம் அங்கத்தினர் உள்ள ஜப்பான் தொழிற்சங்கம்

### கம்யூனிஸ்ட் கட்சியுடன் ஒத்துழைக்கும்

டோக்கியோ, ஜூன் 22—

ஜப்பானிய கம்யூனிஸ்ட் கட்சியானது தேசபக்தியும், உண்மையிலேயே சோஷலிஸ லட்சியமும் உலக சமாதான ஆர்வமும், தொழிலாளர் பால் உண்மை நட்பும் உள்ளதாக இருப்பதாலும், தெட்டத் தெளிவான கொள்கையும் திட்டங்களும் அவர்களிடம் இருப்பதினால், அவர்களுடன் ஒத்துழைப்பதென்று 35 லக்ஷம் அங்கத்தினர்களுடைய ஜப்பானியத் தொழிற்சங்கக் கவுன்சில் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

எதிர்காலத்தில் நடத்தப்பட வேண்டிய போராட்டங்களிலெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சியையும் சேர்த்துக் கொள்ளுவதென்றும் முடிவு செய்யப்பட்டது. —நவசீனச் செய்தி

## விஞ்ஞான ஆராய்ச்சி மந்திரி கபீர் மாஸ்கோ செல்வார்

முசோரி, ஜூன் 22—

மத்திய சர்க்கார் கலாச்சார விஞ்ஞான ஆராய்ச்சித்துறை அமைச்சர் ஹுமாயூன் கபீர் சோவியத் சர்க்கார் அழைப்பை ஏற்று ரஷ்யாவுக்கு ஜூலை மாதத்தில் விஜயம் செய்வார் என்று தெரிகிறது.

## டிகால் பிரிட்டன் செல்வார்

பாரிஸ், ஜூன் 23—

பிரான்சின் ஜனாதிபதி தளபதி டிகால், பிரிட்டிஷ் பிரதமர் ஹெரால்ட் மாக்மிலன் அழைப்பை ஏற்று பிரிட்டனுக்குச் செல்வார் என்று தெரிகிறது.

## கேரள அரசாங்கத்துக்கு பேராதரவு

### பின்தங்கிய சமூகத்தினரின் தலைவர்கள் கூட்டறிக்கை

திருவனந்தபுரம், ஜூன் 22—

பின்தங்கிய சமூகத்தினரின் 23 முக்கிய தலைவர்கள் கேரள அரசாங்கத்துக்கெதிராக நடைபெறும் கிளர்ச்சியைக் கண்டித்து ஓர் கூட்டறிக்கை விடுத்துள்ளனர். இந்தத் தலைவர்கள் பல்வேறு அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்கள்; சிலர் எந்தக் கட்சியிலும் சேராதவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. திருவாளர்கள் டி. டி. கேசவ சாஸ்திரி (முன்னாள் காங்கிரஸ் எம். எல். ஏ.) டி. கந்தன்கலி (மாவேலிக்கரை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர்) பி. சி. ஆதிச்சன் (முன்னாள் காங்கிரஸ் எம்.எல் ஏ.) பி. அச்சுதானந்தன் (கோழிக்கோடு நகரசபை உறுப்பினர்) ஆகியோர் இந்த அறிக்கையில் கையெழுத்திட்டுள்ளனர்.

"சமூக வேறுபாட்டையும் சமூக அடிமைத்தனத்தையும் ஏற்றத்தாழ்வுகளையும் நோக்கமாகக் கொண்டு உழைப்பதற்குப் பதிலாக வகுப்புவாத விஷத்தை உமிழ்ந்து பழைய ஆதிக்கத்தை மீண்டும் நிறுவக் கேரளத்திலுள்ள எதிர்க்கட்சிகளும் வகுப்புவாத ஸ்தாபனங்களும் முயற்சிக்கின்றன. இது கண்டிக்கத்தக்கது.

"சட்டசபையால் நிறைவேற்றப்பட்டு ஜனாதிபதியின் அங்கீகாரம் பெற்றதொரு சட்டத்தை அமுல்நடத்தவிடாது தொந்தரவு தந்தால் ஜனநாயகம் என்பதற்கு என்ன பொருள்? கல்விச் சட்டத்துக்கு இத்தகைய எதிர்ப்பு என்றால் விவசாய உறவு மசோதாவுக்கு என்ன கதி ஏற்படப் போகிறது?

"புரட்சி" என்றும் "மீட்பு" என்றும் மக்கள் ஆதரவையிழந்த வகுப்புவாத பிற்போக்கு சக்திகள் கூக்குரலிடுவதைக் கண்டு பின் தங்கிய சமூகத்தினர் வாளாவிருக்க முடியாது.

"பலாத்காரச் செயல்களில் எதிர்க்கட்சிகளும் வகுப்புவாதிகளும் ஈடுபடுவார்களானால் அரசாங்கம் பலாத்காரத்தை உறுதியுடன் ஒடுக்க வேண்டும். ஹரிஜனங்கள் போன்ற பின்தங்கிய சமூகத்தினர் பேராதரவு அரசாங்கத்துக்கு உண்டு என நாங்கள் உறுதி கூறுகிறோம்" என அவர்கள் தமது கூட்டறிக்கையில் கூறுகின்றனர். —நியூ கேரளா.

## வட கேரள என். ஜி. ஓ.க்கள் வேலைநிறுத்தம் ஒத்திவைப்பு

கள்ளிக்கோட்டை, ஜூன் 22—

கேரள ராஜ்யத்தின் தற்போதைய நிலவரத்தை முன்னிட்டு. ஒரு நாள் அடையாள வேலைநிறுத்தத்தை ஒத்திப்போடுவதென்று வட கேரள கெஜட் பதிவில்லாத என். ஜி. ஓ.க்கள் சங்கம் முடிவு செய்தது. (பி.டி.ஐ)

## தலாய்லாமாவை ஜெயப்பிரகாஷ் சந்தித்தார்

### சீனா மீது மேலும் அவதூறு

முஸோரி, ஜூன் 23—

தலாய்லாமாவை சர்வோதயத் தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயண் சந்தித்தார். திபெத் சுயாட்சிக்காகப் போராட வேண்டும் என்று அவர் வலியுறுத்தினாராம். சீனா அட்டூழியங்கள் விளைத்துள்ளதாக அவதூறு கூறிய அவர் சர்வதேச விசாரணை கோரினார்.

திபெத் நிலைபற்றி பிரதமர் நேரு, மந்திரிகள் பந்த் மொரார்ஜி தேசாயுடன் ஜெயப்பிரகாஷ் பேசுவார் என்று தெரிகிறது.

## திருமதி இந்திரா மழுப்புகிறார்

காந்தி கிராமம், ஜூன் 21—

யு. என். தேபரிடமிருந்து விவரமான அறிக்கை ஒன்றைப் பெறும்வரையில் கேரள விவகாரங்களைப்பற்றி திட்டவட்டமாக எதுவும் கூறுவதற்கில்லை என்று காங்கிரஸ் அக்ராசனர் திருமதி காந்தி இன்று ஒரு பேட்டியில் அறிவித்தார். அவர் கூறியதாவது:—

"நேற்று சென்னையில் தேபரைச் சந்தித்து சிறிது நேரமே பேசினேன். இந்தக் கட்டத்தில் எதுவும் கூற நான் விரும்பவில்லை."

கேரள காங்கிரஸிற்கும் காங்கிரஸ் மேலிடத்திற்குமிடையில் தப்பபிப்பிராயம் நீங்கியதா வென்று கேட்டதற்கு திருமதி காந்தி சொன்னபதில்:—

நிலைமை இன்னும் தெளிவுபடவில்லை. காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு கூட்டம் ஜூன் 25 அல்லது 26 தேதியில் நடக்கும். கேரளம்பற்றி தேபர் சமர்ப்பிக்கும் அறிக்கை அக்கூட்டத்தில் விவாதிக்கப்படும். அதன் பிறகு தான் எதுவும் திட்டவட்டமாகக் கூறக்கூடும். (பி.டி.ஐ)

## ஹெலிகாப்டர் விபத்தில் 7 பேர் பலி

சிங்கப்பூர், ஜூன் 22—

வட போர்னியாவில் எண்ணெய் சுரங்கத்திற்கு ஆட்களையும் சாமான்களையும் ஏற்றிச் செல்லும் ஒரு ஹெலிகாப்டர் நொறுங்கி கடலுக்குள் வீழ்ந்ததால் 7 பேர் இறந்தனர். —ராய்ட்டர்

## இந்தியாவை எதிர்க்கவே படை திரட்டுகிறாராம்

### அயூப்கானின் பேச்சு

கராச்சி, ஜூன் 22—

பாகிஸ்தானின் தேவை எவ்வளவோ, அதற்கு மேலாகவே படை பலம் திரட்டுவது ஏன் என்று கேட்கப்பட்டதொரு கேள்விக்கு, பாகிஸ்தான் ஜெனரல் அயூப்கான் அளித்த பதிலாவது:—

"பாகிஸ்தானிடம் இருக்கும் படைகளின் எண்ணிக்கையை விட 3 மடங்கு படைகள் இந்தியாவிடம் இருக்கிறதாகவும், இந்தியா எந்தவொரு சமரசத்துக்கும் வர மறுத்து ஆக்ரமிப்பு மனோபாவத்துடன் இருப்பதாகவும், எத்தனையோ தடவை நேசக்கரத்தை நீட்டியும் கூட, பிரச்சினைகளைத் தீர்த்து பொது பாதுகாப்பு ஏற்படுத்திக் கொள்ளலாமென்றும் கூட கேட்டதற்கு இந்திய சர்க்கார் உதறி எறிந்துவிட்டதாகவும், இந்தியப் படைகளில் 80 சத விகிதப் படைகள் பாகிஸ்தான் எல்லைப்புறங்களில் நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதாகவும், பத்தே நாள் முன்னறிவிப்பு கொடுத்தாலே பாகிஸ்தான் மீது படையெடுக்கக் கூடிய அளவுக்கு சகல முஸ்தீபுகளுடனும் அவை இருப்பதாகவும், இந்த நிலைமையில், பாகிஸ்தானிடம் அதிக பலமில்லாவிட்டால், பாகிஸ்தான் எல்லைப்புற மக்கள் பயந்து போய், லக்ஷக்கணக்கில் உள்நாட்டுப் பகுதிக்குள் அகதிகளாக வர நேரிடுமென்றும், அதனால் ஏற்படும் பிரச்சினைகளைச் சமாளிப்பது கஷ்டமென்றும், ஏற்கனவே இந்தியாவிலிருந்து ஒரு கோடிப் பேர் அகதிகளாக பாகிஸ்தானுக்குள் வந்திருப்பதாகவும், எனவே அதிகப் படை பலம் திரட்ட அதிக பணம் செலவிட வேண்டியது அவசியமாகி விட்டதென்றும் அயூப்கான் கூறினார்.

## சோவியத் வான அறிஞர்

நியூயார்க், ஜூன் 20—

எரவானிலுள்ள பையுராகான் வானாராய்ச்சி நிலையத்தின் டைரக்டரான வி. ஏ. அம்பர்ஸ்தும்யான் அமெரிக்க விஞ்ஞானப் பேரவையின் துணை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார் என்று இங்கு அறிவிக்கப்பட்டுள்ளது. பேரவை அறிஞர் வி. ஏ. அம்பர்ஸ்தும்யான் இவ்வாண்டின் இந்திய விஞ்ஞானக் காங்கிரசில் சோவியத் தூதுக் குழுவின் தலைவராகப் பங்கெடுத்துக் கொண்டார் என்பது தெரிந்ததே. —"டாஸ்"

## லண்டனில் பொதுத் தேர்தல்

லண்டன், ஜூன் 22—

இங்கிலாந்தில் பார்லிமெண்ட் பொதுத் தேர்தல் அக்டோபர் மாதத்தில் நடைபெறலாம் என்று தெரிய வருகிறது. குறிப்பிட்ட தேதிகள்பற்றி நிர்ணயிக்கவில்லை.

## இந்தியாவிலேயே தயாரித்த முதல் ராணுவ லாரி

### 'சக்திமான்' என்று நாமகரணம்

### அரசாங்கத் துறையின் திறமைக்கு நேரு பாராட்டு

ஜபல்பூர், ஜூன் 21—

கன்காரேஜ் பாக்டரியில் மூன்று டன் எடையுள்ள முதல் ராணுவ டிரக் (லாரி) தயாராயிற்று. இன்று அந்த முதல் டிரக்குக்குப் பிரதமர் நேரு 'சக்திமான்' என்ற பெயர் சூட்டினார்.

அரசாங்கத் துறையின் வளர்ச்சிக்கும் சாதனைகளுக்கும் தொழில் சகாப்தத்தில் நம்பிக்கையுடன் பிரவேசிக்க இந்திய மக்கள் திட சங்கல்பம் கொண்டிருப்பதற்கும் 'சக்திமான்' என்ற முதல் இந்திய ராணுவ டிரக் சின்னமாகும் என்று பிரதமர் கூறினார்.

நேரு தொடர்ந்து பேசுகையில் "தனியார் துறையைச் சேர்ந்த நண்பர்கள் அரசாங்கத் துறை எப்படி இயங்குகிறதென்பதைப் பார்த்து இதனிடமிருந்து திறமையைக் கற்கவேண்டுமென்பது எனது விருப்பமாகும்" என்றார்.

இந்த டிரக்கைத் தயாரித்த பாக்டரி தொழிலாளர்கள், இந்த வைபவத்தில் கலந்து கொண்டனர்.

பாதுகாப்பு மந்திரி வி. கே. கிருஷ்ண மேனன், சுரங்கம், உருக்கு மந்திரி சர்தார் ஸ்வரண் சிங், மத்திய பிரதேச முதல் அமைச்சர் டாக்டர் கட்ஜு, ராணுவக் காரியாலயத் தளபதி ஜெனரல் திம்மையா, விமானப் படை தளபதி முகர்ஜி, கடற்படை உதவி தளபதி சாட்டர்ஜி முதலியோர் வந்திருந்தனர்.

ராணுவ டிரக் திட்டத்தை நேரு ஆரம்பித்து வைத்தபின், கர்னல் நாக்ரானி இந்தியாவிலே தயாரிக்கப்பட்ட முதல் டிரக்கை ஓட்டினார்.

பிரபல ஜெர்மன் கம்பெனி ஒன்றின் ஒத்துழைப்புடன் இந்திய ராணுவ இலாகா, ராணுவ டிரக்குகளை இங்குள்ள ராணுவ பாக்டரியில் உற்பத்தி செய்யத் துவங்கியுள்ளது.

## குரோமிகோ மாஸ்கோ புறப்பட்டார்

ஜினிவா, ஜூன் 21—

சோவியத் அயல்நாட்டு மந்திரி குரோமிகோ இன்று ஜினிவாவிலிருந்து மாஸ்கோவுக்கு விமானத்தில் புறப்பட்டார் புறப்படும் முன்பு அவர் பின் வருமாறு அறிவித்தார்:

"அயல்நாட்டு மந்திரிகள் மகாநாடு ஒத்திவைக்கப்படுகிறது. பெர்லின் பற்றி ஒரு உடன்பாடு காண பிரேரணைகளைச் சமர்ப்பித்திருக்கிறோம். மேலை நாடுகள் பாரபட்சமின்றி ஆராய்ந்து, பெர்லின் விஷயமாக ஒரு உடன்பாட்டிற்கு வர ஆட்சேபங்களை எழுப்பாதுஎன்று நம்புகிறேன்."

## நீர் மட்டம்

சென்னை, ஜூன் 23—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 20-6-59 | 54·1 |
| பெரியாறு | 20-6-59 | 15·0 |
| வைகை | 19-6-59 | 53·9 |
| பாபநாசம் | 21-6-59 | 51·9 |
| கிருஷ்ணகிரி | 21-6-59 | 27 0 |
| சாத்தனூர் | 22-6-59 | 49·3 |
| மணிமுத்தாறு | 20-6-59 | 61·2 |

## நடக்கவிருப்பவை

### திருவொற்றியூர்

25 6-59 வியாழன் மாலை 6 மணிக்கு திருவொற்றியூர் தெற்கு மாடவீதி சௌராஷ்ட்ரா சத்திரத்தில் மார்க்ஸிய வகுப்பு (2ம் பாகம்) நடைபெறும் தோழர் வி. பி. சிந்தன் வகுப்பு நடத்துவார்.

## மார்க்கெட் நிலவரம்

தங்கம், வெள்ளி

சென்னை, ஜூன் 23—

| | |
|---|---|
| ...வரன் | ரூ. 80-0-0 |
| ...ங்கம் (ரெடி) | 122 0-0 |
| ...முசை தங்கம் | 120 0-0 |
| வெள்ளி 100 தோலா | ரூ. 199-8-0 |
| வெள்ளி - ரூ. விலை | ரூ. 2-0-6 |

மணிலா பயறு

...81 ராத்தல் கொண்ட ...ரம் 1-க்கு விற்பனை வரி உட்பட ரூ. 194 மு 199

மணிலா எண்ணெய்

500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி 3% FFA

| | |
|---|---|
| (மொத்தவிலை) | ரூ. 377-00 |
| ஜூன் | ரூ. 377-00 |
| ஜூலை | ரூ. 374-50 |
| "ஆகஸ்ட்" | ரூ. 375-00 |

விளக்கெண்ணெய்

500 ரா. பாரம் 1-க்கு மதராஸ் கிடங்கு டெலிவரி) ரூ. 335-00

சேலம் 'தாமரை' 'அன்னம்' (37½ ரா. டின் 1-க்கு) ரூ. 26-00

தேங்காய் எண்ணெய்

(37½ ராத்தல் டின் 1-க்கு விற்பனை வரி உட்பட)

கொல்லம் சரக்கு

| | |
|---|---|
| எம். எஸ். மார்க்கு | 40-00 |
| அம்பு மார்க்கு | 38-75 |
| ராஜா மார்க்கு | 38-75 |

சர்க்கரை

| | |
|---|---|
| பாரி "என்" (2 அந்தர் மூட்டை | 118-00 |
| கல்கத்தா | 119 31 |
| நைஜாம் | 119-00 |

## வானொலி

### சென்னை-1

25—6—59

காலை முதல் ஒலிபரப்பு

6-55 மங்கள இசை 7-00 துதிப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள், வானிலை அறிவிப்பு 7-15 தமிழில் செய்தி 7-30 லலித சுப்ரமண்யம் பாட்டு 8-00 மதுர கீதம் 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

1-00 மஹிளா மண்டலி 1-30 கானமஞ்சரி 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 இசைச்செண்டு 2-00 தமிழில் செய்தி 2-10 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றாவது ஒலிபரப்பு

5-30 எம். வி. நடராஜ சுந்தரம் நாகஸ்வரம் 6-05 பிராந்தியச் செய்திகள் 6 15 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சி அஞ்சல்) 7-15 தமிழில் செய்தி 7-30 சமுதாய உரையாடல் (திருச்சி அஞ்சல்) 7-40 வாத்ய இசை 7-45 ராகம், தானம், பல்லவி முசிரி சுப்ரமணிய ஐயர் பாட்டு ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரி வயலின் காரைக்குடி முத்து ஐயர் மிருதங்கம் டி. எஸ். வில்வாத்ரி ஐயர் கடம் 8 30 Radio News Reel (Relay from Delhi) 8 40 வாத்யஇசை 8-45 இசைமாலை 9-00 எஸ். கல்பகம் வயலின் 9-30 அகில பாரத நாடக நிகழ்ச்சி தமிழில்) 10-30 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

### திருச்சி

25—6—59

காலை முதல் ஒலிபரப்பு

7-00 இசைக்கதிர் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள், 7-15 தமிழில் செய்தி 7-30 யு. ஆர். சந்திரா பாட்டு 8-00 ஆங்கிலத்தில் செய்தி 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

1-00 கதம்பம் 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 வாத்ய இசை 2-00 தமிழில் செய்தி 2-10 யு. ஆர். சந்திரா பாட்டு 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றாவது ஒலிபரப்பு

4-45 விவித பாரதி கர்நாடக சங்கீத நிகழ்ச்சி (பம்பாய் அஞ்சல்) 5-45 இசைப் பயிற்சி 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் 7-15 தமிழில் செய்தி 7-30 சமுதாய நீதி பேச்சு 7-40 இம் மாதப் பாடல் 7-45 ராகம், தானம், பல்லவி முசிரி சுப்ரமணிய ஐயர் பாட்டு (மதராஸ் அஞ்சல்) 8-30 டெல்லி அஞ்சல் 8 40 திரைப்பட இசை 9.00 ஆங்கிலத்தில் செய்தி 9-15 சுபத்த சங்கீதம் 9-20 அகில பாரத நாடக நிகழ்ச்சி 10-30 ஒலிபரப்பு முடிவு.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிட்டவர் என். கிருஷ்ணசாமி ஆசிரியர்: ப. ஜீவானந்தம், முகவரி: 33, பிராட்வே சென்னை-1.
Janasakthi Broadway Madras-1